# திருக்காவலூர்க் கோவில்

ரா. பி. சேதுப் பிள்ளை, பி.எ., பி.எல்.

அல்லயன்ஸ் கம்பெனி
மயிலாப்பூர் — சென்னை

உ சிவமயம்.
அண்ணாமலையார் துணை.

# திருக்காவலூர்க் கோவில்

K.V.AL.M. Ramanathan Chettiar
31-12-44



ஆக்கியோர்
**ரா. பி. சேதுப் பிள்ளை பி. ஏ., பி. எல்.,**
*தலைமைத் தமிழ் விரிவுரையாளர்*
சென்னைப் பல்கலைக் கழகம்

தமிழ்க்கலை அச்சகம், காஞ்சி.
1941

விலை அணா] [பன்னிரண்டு.

# நன்றியுரை

"திருக்காவலூர்க் கோவில்" என்னும் பெயருடைய இந்நூல், வீரமாமுனிவர் இயற்றிய "திருக்காவலூர்க் கலம்பகம்", "கித்தேரி யம்மாள் அம்மானை" ஆகிய இருநூல்களிலும் அமைந்த கருத்தைத் தழுவி எழுதப்பட்டதாகும். வீரமாமுனிவர் தமிழ்மொழிக்குச் செய்த பெருந்தொண்டு விளங்குதல் வேண்டும் என்னும் ஆர்வத் தாலேயே இந்நூலை யான் எழுதலுற்றேன்.

வீரமாமுனிவரது நெறியிலே நின்று விழுமிய பணியாற்றும் பெரியாராகவும், மொழி நூற் புலமையில் தலைநின்று "சொற்பிறப்பு ஒப்பியல் தமிழகராதி", என்னும் பேரகராதியை இயற்றிய ஆசிரியரா கவும் விளங்கும் யாழ்ப்பாணத்து, நல்லூர், ஞானப்பிரகாச சுவாமிகள் என் வேண்டுகோளுக்கு இணங்கித் தமிழில் "தந்துரை"யும் ஆங்கிலத் தில் முகவுரையும் தந்துதவினார்கள். அவர்கள் அன்பு கூர்ந்து அளித்த நல்லுரை வீரமாமுனிவர் பெருமையை நன்கு விளக்குகின்றது.

இத்தகைய நல்லுரை தந்த நல்லூர் அடிகளார்க்கும், இந்நூலைச் செவ்விய முறையில் எழுதியுதவிய சென்னை அர்ச்கேபிரியேல் கல்லூரித் தமிழாசிரியர், திரு. பா. சொக்கலிங்கம் அவர்களுக்கும், அன்புடன் அச்சிட்டு உதவிய தமிழ்க்கலை ஆசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்களுக்கும், அச்சகத்தாருக்கும் என்மனமார்ந்த நன்றி உரியதாகும்.

சென்னை,
20-7-41.

**ரா. பி. சேதுப்பிள்ளை.**

# உள்ளுறை

# தந்துரை



"திருக்காவலூர்க் கோவில்" எனும் இந்நூலை இயற்றிய செழுந் தமிழ் வல்லாரைத் தமிழ் உலகத்துக்கு யான் அறிமுகப்படுத்துதல் வேண்டப்படாது. மன்னிய புகழ் நிறுவிய சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழறிவூட்டும் தகைமைசான்றவரை எவரே அறியாதார்? காதையும் கருத்தையும் கவரும் வனப்புள்ளதாய் அவர் யாழ்ப்பாண நகரிற் செய்த அரிய சொற்பொழிவொன்றை யானும் ஒருகாற் கேட்டுமகிழ்ந்தேன். செய்யுள் ஓசை ஒழுகுகின்ற அவரது தெள்ளிய தமிழ் நடையை இந்நூலிற் கண்டு களிபேருவகை எய்தினேன்.

திருவாளர் சேதுப்பிள்ளையவர்களிடம் விளங்குகின்ற நல்லறிவாளர்க்குரிய சிறப்பியல்பொன்றை இங்கு எடுத்துக்காட்டல் இயைபுடையதாகும். தமிழகத்தின் வடக்கிலிருந்து இறங்கி வந்தோரான சமணக் கொள்கையாளரும் பௌத்தரும் எமது இனிய மொழிக்குப் புனைந்திருக்கின்ற காப்பியங்கள் எனும் அணிகளை உவந்தேற்றுப் போற்றுவோருட் சில்லோர், தேம்பாவணி முதலான செவ்விய நூல்களையோ, மேனாட்டாரான கிறீஸ்த நாவலர்கள் அவற்றை இயற்றினர் என்றமை ஒன்றனையே குறித்து, ஒதுக்கிவைப்பர். வடநாட்டாராயினென், மேல்நாட்டாராயினென், சமணர் பௌத்தராயினென், கிறீஸ்தவராயினென்; எமது தாய் மொழியைக் கசடறக் கற்று அதற்கு அணிகலனாகத் திகழும்படியாகச் செய்த பனுவல்கள் உளவாயின் அவற்றைப் பொன்னேபோற் போற்றுவதன்றோ புலவர்க்கு ஏற்புடைத்தாகும்! இந்நூலுடையார் நடுநிலைமையான அன்னதோர் நோக்கையே மேற்கொண்டு இத்தாலியிற் பிறந்த அன்னியரும், தாம் ஒப்பாத சமயத்துறையிற் படிந்த ஓர் கிறீஸ்தவருமான வீரமாமுனிவர் இயற்றிய இரு செய்யுட் தொகுதிகளை அளியோடு ஆராய்ந்து, அவற்றிற் பொதிந்துள்ள அழகுகளை எடுத்தோதியிருக்கின்றார். உண்மைத் தமிழ் அன்பரே

தமிழின் இனிமை எவ்வெவ் நூலிற் செறிந்திருப்பினும் அவ்வந்நூலை ஆராய்ந்து மகிழ்வர். புரை தீர்ந்த புலமை படைத்தோரே பிறர்மாட்டுத் துலங்கும் புலமையை மதிக்கவல்லவராவர். இப்போது அரங்கத்தில் வருகின்ற "திருக்காவலூர்க் கோவி"யைப் படிப்போர் திரு. சேதுப்பிள்ளையவர்களிடம் நூல்களின் நயம் கண்டு பாராட்டும் அன்னதோர் நுண்ணறிவு நிரம்பப் பொருந்தியிருத்தலை உணர்வர். பிள்ளையவர்களது தமிழ்ப் புலமைத்திறனை அப்பால் விதந்து கூறுதல் "பொன்னின் குடத்திற்குப் பொட்டிட்ட" பெற்றியாகும் என விடுக்கின்றேன்.

வீரமாமுனிவர் இசைத்த செய்யுள் நடை நூல்களுள் "திருக்காவலூர்க் கலம்பகம்" "கித்தேரியம்மாளம்மானை" எனும் இரண்டும் கனிந்த உள்ள நெகிழ்ச்சியால், கடினமில்லாப் பாவினங்களின் ஓசை நயத்தால் மேம்பட்டவை. முந்தியது, கலம்பகத்துக்குரிய பல உறுப்புக்கள் விரவி உலகமீட்பரின் திப்பிய அன்னையாரது ஒப்பில் மேன்மைகளைப் போற்றுவது. பிந்தியது, நாடோடி அம்மானைகளைப்போலாது, இயற்றமிழை மிகத்தழுவி இன்பந் தருவதாய் மிளிர்வது. கிறீஸ்துவின் மறைக்காய் உயிர்நீத்த கித்தேரியம்மாளின் உண்மைச் சரிதையைப் பாட எடுத்துக்கொண்ட முனிவர், பழந் தமிழ்க் கதைநூல்களின் பான்மையை அடியொற்றி, உயர்வு நவிற்சியாய்ப் பல வரலாறுகளை விரித்துரைத்துப் போந்தார். இவற்றால் "கித்தேரியம்மாளம்மானை" படிக்கப் படிக்கத் தெவிட்டாத மகிழ்ச்சியை ஊட்டுகின்ற பல பாகங்கள் கொண்டதாய் மணிமிடை பவளம்போல ஒளிர்கின்றது.

இவ்விரு நூல்களின் பொருளையும் போக்கையும் தமிழுலகு அறிந்து இன்புறச் செய்த மங்காப் புகழ் திரு. சேதுப்பிள்ளை அவர்களுக்கு உரியதாகின்றது.

**நல்லூர், சுவாமி-ஞானப்பிரகாசர்.**

# INTRODUCTION

Bishop Caldwell the great Dravidian scholar, referring to the Tamil works of Beschi says: "His prose style in the colloquial dialect, though good, is not of pre-eminent excellence, but his poems in the classical dialect, especially his great poem the **'Thembavani'** a long and highly wrought religious epic in the style of the **Chintamani,** are so excellent in the point of view of Hindu excellence, that is, they are so elaborately correct, so highly ornamented, and so invariably harmonious, that I have no doubt he may fairly claim to be placed, by the vote of impartial native critics themselves, in the very first rank of the Tamil poets of the second class; and when it is remembered that the first class comprises only three or, at the utmost, four works,-the **Kural,** the **Chintamani,** the **Ramayanam,** the **Naladiyar,**-it seems to me worderful, the more I think of it, that a foreigner should have achieved so distinguished a position."

It is indeed "wonderful" that a European, who began the study of Tamil only after he was thirty years old should have come to be ranged with the classical writers of Tamil literature. Costanzo Giuseppe Beschi, better known among the Tamil people as Viramamunivar, was a native of Italy, born (1680) at Castiglione in the Venetian Republic. He came out to India as a Catholic missionary in

1710 and died at Ambalacat early in 1747. Within this period, although incessantly engaged in his professional career, travelling up and down the then vast territory of the Madura mission, a prey to the endless worries resulting form the frequent wars, pestilences and famines of those troublous days—Beschi had studied Sanskrit, Telugu and especially Tamil in which he became proficient to an extraordinary degree. He composed a grammar of high Tamil in the conventional sutra and commentary form, and was the first to write a grammar of low Tamil in Latin, which still remains the foundation of Tamil philology. He is the compiler of the first Tamil dictionary in alphabetical order. A Tamil—Latin and a Tamil-Latin-Portuguese dictionary were also the fruits of his indefatigable industry. He wrote several prose works, controversial like the Veta Vilakkam, instructional like the Vetiyar Olukkam and humourous like the Paramartta-kuru-katai. His metrical compositions are also many and varied. The greatest of them is the Tamil "Divina Commedia" called Tempavani or the unfading garland-a work containing 3615 tetrastrichs in 36 cantos. Baumgarten says: "it is the noblest poem in honour of St. Joseph written in any literature East or West. In one of the most difficult languages of Southern India Beschi produced a poem which, for richness and beauty of language, for elegance of metre, popular treatment and true poetical conception and execution is the peer of the native classics."

Among his smaller poetical compositions are the Tirukkavalur-kalampakam and Kitteriyammal-

ammanai, from both of which Mr. R. P. Sethu Pillai, BA., B. L., of the University of Madras has made up this attractive volume. The former is a poem comprising almost all the varieties of stanzas in Tamil prosody. Beschi gave the Christain colony at Ellakuricci, on the northern bank of Kavery, the name of Tiruk-kavalur-the village of holy protection-in honour of the blessed Virgin Mary whom he took as the patroness of its church, under the title of Our Lady of Refuge. It became a place of pilgrimage and continues to be such till now. Having established this sanctuary as a safeguard against the Danes of Tarankampadi threatening to lead his Christians astray, he sang the praises of his heavenly protectress in choice verse. His Kalampakam stands out as a glittering gem of lyric poetry. Mr. Sethu Pillai has set this gem on a background of exquisite beauty, narrating in mellifluous Tamil prose, the remarkable story of this sanctuary as found in the authentic letters of its early period and interspersing the poet's own lines in appropriate places.

Quitteria is a popular Saint in portugal and the South of France. She was a daughter of the Governor of Galicia (in Spain) and died as a martyr, perhaps under Commodus, for her faith and her resolve to remain a virgin. Her body is preserved in a sarcophagus in the Gallo-Roman crpyt of Mas d 'Aire. The Bollandists add no more about her history. Her name alone is found in the Roman Martyrology under May 22. So little being known about this ancient Virgin-martyr, the long account,—notably

the story of the eight sisters born with her at the same time,—found in the Kitteriyammal Ammani was evidently drawn from pious legendary lore. Some of the marvellous details so pleasing to the Oriental imagination, doubtless, received still more poetical embellishment at the hands of Beschi who, we know, had completely adopted Eastern ways of thinking and writing. According to him, Ammani is one of the lowest and easiest froms of Tamil versification. But his, certainly, is an exception by its high style and classical elegance. I should say that Mr. Sethu Pillai's prose does full justice to the original. The whole story is written in flowing, melodious Tamil, while many of the most beautiful passages of the original are aptly introduced into the narrative, so that the reader gains a good idea of the work of a truly great poet.

**S. GNANA PRAKASAR, O. M. I.,**

Nallur, Jaffna.

# வீரமா முனிவர் சரித்திரச் சுருக்கம்

இவ்வுலகில் வழங்கும் செம்மை சான்ற மொழிகளுள் தமிழ் மொழியும் ஒன்றாகும். முன்னாளில் இம்மொழியை மன்னரும் முனிவரும் போற்றி வளர்த்தார்கள்; வேறுபட்ட சாதியாரும், மாறுபட்ட சமயத்தாரும் இசைந்து ஆதரித்தார்கள். பாரத நாட்டிற் போந்த பிற நாட்டு நல்லறிஞரும் இதனைப் பேணினார்கள்.

பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இத்தாலியா தேசத்து வித்தகர் ஒருவர் தமிழ் நாட்டிற் பணி செய்யப் போந்தார். அவரை வீரமா முனிவர் என்றும் தைரியநாதர் என்றும் தமிழ்நாடு இன்றும் போற்றுகின்றது. இயேசு சமயத் தொண்டராகிய முனிவர் தமிழ் மொழியைக் கற்கத் தொடங்கிய காலத்தில் தமிழ் நூல்களெல் லாம் ஏட்டுச் சுவடிகளில் அடங்கியிருந்தன. அந் நூல்களை முறை யாகப் பயிற்றும் கலாசாலைகளும் இல்லை. கல்வியில் ஆர்வமுள்ளவர்கள் நல்லாசிரியரை நாடி யடைந்து 'உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்' கற்று வந்தார்கள்.

நல்ல தமிழ் வழங்கும் நாடென்று அறிந்தோர் புகழும் பாண்டி நாட்டில், வீரமா முனிவர் தமிழ் மொழியை முயன்று பயின்ற பின்னர், கயத்தாற்றுப்பாளையத்தைச் சார்ந்த குருக்கள்பட்டி என்னும் நிலையத்தில் பணியாற்றப் போந்தார்; மெய் வருத்தம் பாராது தொண்டு புரிந்து மேற்குல மக்களிற் பலரை இயேசு மார்க்கத்திற் சேர்த்தார். இங்ஙனம் தொன்னெறி துறந்து புது நெறியை மேற் கொண்ட மாந்தருள் சேர்வைக்காரன் என்பவன் சிறந்து விளங்கினான். இவன் கயத்தாற்றுப்பாளையத் தலைவனாகிய மழவராயனுக்கு மைத்து னன். சேர்வைக்காரன் இயேசு சமயத்திற் சேர்ந்தானென்னும் செய்தி பாளையம் முழுதும் பரவிற்று. இன்னும் கயத்தாற்றுப் பெருங்கிழவ னாகிய பூசாரி ஒருவன் குடும்பத்துடன் வீரமா முனிவரால் ஞான நீராட்டப் பெற்றுக் கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்தான். செல்வருட் சிறந்த சேர்வைக்காரனும் பழுத்த முதுமையுற்ற பூசாரியும் புதுச்

சமயத்தை ஏற்றார் என்றறிந்தபொழுது பாளையத்திற் பெருங் குழப்பம் உண்டாயிற்று. கயத்தாற்றுப்பாளையம் முழுதும் கர்த்தர் மயமாயிற்று என்று கதை கட்டி விட்டார் சிலர். பாளையத்தில் இயேசு சமயம் பரவிய பான்மையைக் கண்டு வேதியர் வெகுண்டார்; முன்னையோர் போற்றி வளர்த்த தொன்னெறி பின்னமுற்றதென்று வருந்தினார்; 'விபரீதம் விளைத்த வீரமா முனிவரை' மனமார வெறுத்தார். ஆயினும் மழவராயனும், கயத்தாற்றுப் பெருஞ் செல்வரும் முனிவருடைய சிறந்த நண்பராய் இருந்தமையால் யாதும் செய்ய இயலாது சாபசரம் விடுத்து அமைந்தார்.

இங்ஙனம் சமயப் பணி சிறந்து ஓங்கி வருங் காலத்தில் ஒரு நாள் கிறிஸ்தவ வேடம் புனைந்த கீழ்மகன் ஒருவன், குருக்கள்பட்டியை அடுத்த வடக்கன்குளத்தை வந்தடைந்தான். போந்த இடத்திற்கேற்ற வேடம் புனைந்து, ஏழை மாந்தரை ஏமாற்றி வயிறுவளர்த்து வந்த அவ் வஞ்சகன் வடக்கன்குளத்தில் கிறிஸ்தவனாக நடிக்கத் தொடங்கினான்; அவ்வூர்க் கிறிஸ்தவ உபதேசியாரிடம் சென்று கண்ணீர் சொரிந்தான்; பன்னீராண்டு பாவியாய் வாழ்ந்த தன் சிறுமையைக் கூறி மனங் குழைந்தான்; கருணையங் கடலாகிய இயேசுநாதர் கசடனாய தன்னையும் ஏற்று அருள்புரிவாரோ என்று ஏங்கினான்.

பல ஆண்டுகளாகச் செந்நெறியினின்றும் விலகிச் சிறுமையுற்ற ஒருவன் மீண்டும் இயேசுநாதர் கருணைக்கு உரியவனாக விரும்புகிறான் என்று கருதிய உபதேசியார் அவனைத் திருச்சபைத் தலைவரிடம் அழைத்துச் சென்றார். அவர் அறிவுறுத்திய உண்மைகளை நெஞ்சார ஏற்றுக்கொண்டவன்போல் நடித்த அவ் வஞ்சகன் அன்றிரவே எவருமறியாது வீரமா முனிவர் இருந்த ஊரை நோக்கி நடந்தான்; செல்லும் வழியில் கிறிஸ்தவர் நிறைந்திருந்த ஒரு சிற்றூரில் தங்கி இயேசு சமய போதனை செய்யத் தொடங்கினான். அவன் பேசிய வாசகங்களின் பொருளறிய மாட்டாது திகைப்புற்ற கிறிஸ்தவர்கள், தம்மூர் உபதேசியாரை அவ்விடத்திற்கு அழைத்து வந்தார்கள். இந்து சமயத்தையும் இஸ்லாமிய மார்க்கத்தையும் இயேசு சமயத்தோடு கூட்டிக் குழப்பி வாய்ப்பறை சாற்றிய வஞ்ச

கன்மீது சீற்றம்கொண்ட உபதேசியார் அவனை அருகேயிருந்த மரத்தில் கட்டி வைத்து அடிக்கப் பணித்தார். ஊரார் திரண்டு வந்து அவனை நையப் புடைத்துத் துரத்தினர்.

அவ்வூரை விட்டகன்ற வஞ்சகன் நேராகக் குருக்கள் பட்டிக்குச் சென்று வீரமா முனிவரைக் கண்டான்; அடுத்த ஊர் உபதேசியார் செய்த கொடுமையை எடுத்துரைத்தான்; அவர் கட்டிவைத்தடித்தமையால் பட்ட காயங்களைக் காட்டினன்; தன்னிடமிருந்த ஞான நூல்களை உபதேசியார் கவர்ந்துகொண்டார் என்று பழி தூற்றினன்; அவர்மீது பழிக்குப் பழி வாங்குவதாகப் பயமுறுத்தினன். அவன் வெகுண்டு விடுத்த மொழிகளையும், உடலெங்கும் வீங்கி எழுந்த வடுக்களையும் கண்ட முனிவர் மனம் வருந்தினர்; அகத்தும் புறத்தும் புண்பட்டு வந்தவனைப் பண்பார்ந்த உரையாலும் உணவாலும் ஆற்றித் தேற்றி அனுப்பினர்.

முனிவரிடம் விடைபெற்றுச் சென்றவன் அண்மையிலமைந்த ஆலங்குளத்தில் மதுரை நாயக்க மன்னன் சேனை அரசிறை தண்டுதற்காக வந்திருக்கக் கண்டான்; அத் தானைச் சேவகர்கள் பெரும்பாலும் மகமதியரா யிருக்கக் கண்டு, பக்கிரி வேடம் புனைந்து பாசறையின் முன்னின்று பிரலாபித்தான்; மகமதிய மத போதனை செய்ததன் பயனாகத் தான் அடியும் உதையும் பட்டதாக உருக்கமாய் எடுத்துரைத்தான்; பக்கிரிக்கு நேர்ந்த பழிக்குப் பழி வாங்காத மகமதியர் நபிநாயகத்தின் சீற்றத்திற்கு ஆளாவாரென்று அறைந்தான். மதப்பற்று வாய்ந்த மகமதிய வீரர் பக்கிரிக்கு நேர்ந்த சிறுமையை அறிந்து சீற்றமுற்றூர்; தானைத் தலைவரிடம் அவனை அழைத்துச் சென்று கிறிஸ்தவக் குருக்கள்மார் செய்த கொடுமையை விரித்துரைத்தார்; பக்கிரியின் மானங் குலைத்தவர்மீது பழிக்குப் பழி வாங்குமளவும் தாம் படையெடுப்பதில்லை என்று வஞ்சினம் கூறினர்.

படை வீரரது ஆரவார மொழி கேட்ட தானைத்தலைவன் புண்ணுற்ற பக்கிரியைப் பொருந்த நோக்கினன். அப்பொழுது படைத்தலைவன் உள்ளத்தில் பொருளாசையை ஊட்டக் கருதிய போலிப் பக்கிரி, குருக்கள்பட்டி நிலையத்தில் பாதிரிமார் பெரும் பொருள்

புதைத்துவைத்துள்ளாரென்றும், அந்நிலையத் தலைவராய வீரமாமுனிவரிடம் பொன்னும் மணியும் மலிந்துள்ளன என்றும் விளங்க உரைத்தான். பணவெறியுற்ற படைத் தலைவன் திருச் சபையின் பொருளாதார நிலையினை அறிந்தபொழுது இறையளவும் காலந் தாழ்க்காது முறைசெய்ய முற்பட்டான்; இருநூறு போர்வீரரும் நாற்பது குதிரை வீரரும் கொண்ட படையைக் குருக்கள்பட்டித் திருச்சபையின்மீது ஏவினன்; மகமதிய வீரர் பலரைக் கொண்ட அச் சிறு படைக்குத் தன் மைந்தனைத் தண்டத் தலைவனாக நியமித்தான்; பக்கிரிக்குத் தவறிழைத்த பாதிரியையும், அவரைச் சார்ந்த சமய போதகரையும் சிறை பிடித்து வருவதோடு அவர்க்குரிய பொன்னையும் பொருளையும் கவர்ந்து வருமாறு கட்டளையிட்டான். படை உடனே புறப்பட்டது. தானையின் முன்னே உளங்களி துளும்ப நடந்து பக்கிரி வழி காட்டினன். அந்தி மாலையில் சேனை குருக்கள்பட்டியை வந்தடைந்தது. தண்டத் தலைவன் ஆணையின் வழியே தானையின் ஒரு பகுதி குருக்கள் பட்டியை வளைந்து கொண்டது. மற்றொரு பகுதி வீரமாமுனிவரது இருக்கையையும் திருச்சபையையும் சூழ்ந்தது. படைக்கலம் தாங்கிய வீரரைக் கண்டபோது மாதரும் மைந்தரும் மனங் கலங்கினர். வீதிகளில் நின்றோர் நடுங்கி வீட்டினுள்ளே புகுந்தார். இவ்வாறு பலரும் அஞ்சி நடுங்கி அரற்றக் கண்ட சவரி அடியான் என்னும் கிறிஸ்தவ சீலன் தன் வீட்டினின்று வெளியே போந்தான். அவனைக் கண்ணுற்ற பக்கிரி அவனே தன்னை மரத்திற் கட்டிவைத்த உபதேசி என்று படைவீரரிடம் அறிவித்தான். அவ்வுரை கேட்ட போர் வீரர் சவரி அடியான்மேல் சாடினர்; அவன் உடுத்திருந்த ஆடையைக் கிழித்து எறிந்தார்; கொடுங் கைகளால் அவனைக் குத்திக் குமைத்தார். சாதுவாய சவரிஅடியானைச் சேவகர் ஒறுக்கக் கண்ட ஊரார் அனைவரும் அலறி அழுதார்.

திருச்சபையைப் படைஞர் சூழ்ந்தபொழுது வீரமா முனிவர் பண்டிகை விருந்திற்குரிய பெரும் பணியில் ஈடுபட்டிருந்தார். அவருடன் ஞானேந்திரன் என்னும் சமயபோதகரும் பணிபுரிந்தார். படைவீரர் குரல்கேட்ட முனிவர் ஞானேந்திரனுடன் வெளிப்பட்டார். முனிவரை முன்னரே அறிந்திருந்த படைவீரனொருவன்

மதுரைச் சீமையின் மரியாதை முறைமைக்கேற்ப அவரை அன்புறத் தழுவி, தானைத் தலைவன் ஆணையை அறிவித்தான். தலைவன் ஆணையால் தானும் தன்னைச் சார்ந்த ஞானேந்திரனும் சிறைப்பட்ட தன்மையை அறிந்தபொழுது முனிவர் வியப்புற்றார்; அரசன் ஆணையை ஆதரவற்ற அந்நிய நாட்டுத் துறவியின்மீது செலுத்துதற்கு வீரப்படை முழக்கமும் வேண்டுமோ என்று வினவினர்; பாசறையிலமர்ந்து தானைத் தலைவன் பணித்தால் அப் பணி தலைமேற் கொண்டு நிறைவேற்றச் சித்தமாயிருப்பதாக நேர்மையாகப் பேசினர்; தண்டத் தலைவன் அநுமதிபெற்று, திருக்கோவிலினுள்ளே சென்று இறைவன் இணையடி தொழுதார்; மதுரை மடத் துறவியர்க்குரிய காவி அங்கியை அணிந்து படைஞருடன் பாசறையை நோக்கி நடந்தார். அவர் பின்னே சிறை பிடிக்கப்பட்ட சவரி அடியானும் ஞானேந்திரனும் படைஞர் புடைசூழ நடந்தார்.

இவ்வாறு முனிவரும் போதகரிருவரும் ஆலங்குளப் பாசறையை நோக்கி நடந்து செல்லும்பொழுது தண்டத் தலைவன் பக்கிரியைத் துணைக்கொண்டு முனிவரது இருக்கையைத் துருவினன்; திருக்கோயிற் சுற்றுகளை முற்றுஞ் சோதித்தான்; பக்கிரி பாரித்துரைத்த பொற்குவியல்களை யாண்டுங் காணாது திகைப்புற்றான். இங்ஙனம் பேராசை பிடித்த தண்டத் தலைவன் முனிவரிருக்கையை முற்றுஞ் சுற்றித் திரியும் சமயம் நோக்கிப் பக்கிரி அவ்விடம் விட்டு நழுவினன். நெடும்பொழுது சுற்றும் முற்றும் நாடிய சேவகர் பொன்னெனப் பொலிந்த சில வண்ண நாணயங்களைக் கண்ணுற்றார். இயேசு சமயத் தொண்டர்க்குப் புது வருடப் பிறப்பன்று பரிசாக வழங்கும் வண்ணம் வீரமா முனிவர் வருவித்து வைத்திருந்த பொன் முலாம் பூசிய வட்டங்களைப் பொற்காசுகள் எனக் கருதி அவற்றை ஆர்வமுறக் கவர்ந்தெடுத்து, தண்டத் தலைவன் புறப்பட்டான். கண்ணிற்பட்ட திருக்கோவில் ஆடைகளையும், முனிவர் மனையிற் கிடந்த தட்டு முட்டுச் சாமான்களையும் சேவகர் கவர்ந்து அவன் பின்னே சென்றார்.

பாசறையில் அமர்ந்திருந்த தானைத் தலைவன் முன்னே வீரமா முனிவரும் போதகரிருவரும் சென்று நின்றார். அன்னார் நாட்டிற்

போதித்து வந்த புதுச் சமயத்தின் கொள்கைகளைக் குறித்து தானைத் தலைவன் முனிவரை வினவினன். மெய்யான இறைவனைப் பற்றிய அறிவையும், பேரின்பத்திற்குரிய நெறியையும் இயேசுசமயம் விளங்கக் கூறுமென்று முனிவர் விரித்துரைத்தார். அவ்வுரை கேட்ட தலைவன் "சமயச் செருக்குற்ற முனிவரையும்" அவரைச் சார்ந்தோர் இருவரையும் விலங்கினுற் பிணிக்குமாறு பணித்தான். அவ்வாணை பெற்ற சேவகர், பெருவிலங்கால் மூவரையும் ஒருங்கே பிணித்தார்கள்; பின்பு மூவரையும் தனித்தனியே துன்புறுத்தக்கருதி விலங்கினின்றும் விடுவித்து சவரி அடியானை ஒரு தனிஇடத்திற்கு இட்டுச்சென்று நையப் புடைத்தனர்; இயேசு மார்க்கத்தினைக் கைவிட்டு மீண்டும் தொன்னெறியை ஏற்றுக்கொள்ளுமாறு இடித்துரைத்தனர்; மேலைநாட்டு முனிவர் மறைத்துவைத்திருந்த பொன்னையும் பொருளையும் காட்டித் தரப் பணித்தனர். அடி பொறுக்கலாற்றுது சவரி அடியான் மயங்கி வீழ்ந்தான்.

இங்ஙனம் சவரி அடியானைச் சிலர் ஒருபால் துன்புறுத்தும் பொழுது மற்றும் சிலர் ஞானேந்திரனைப் பலவழிகளால் தம் சமயத்திற்கு மாற்றமுயன்றுர்; நயத்தையும் பயத்தையும் மாறிமாறி ஊட்டினுர்; மேலைநாட்டுப் பாதிரியார் புதையல் வைத்திருந்த இடத்தினைக் காட்டுமாறு வெருட்டினுர். ஒருவகையிலும் தம்கருத்து நிறைவுருதறிந்து நெஞ்செரிவுற்ற தானைத்தலைவன் வீரமாமுனிவர்க்குக் கொலைத்தண்டம் விதித்தான்.

பாசறையில் பாதிரியார்க்கும் போதகர்க்கும் நிகழ்ந்த சிறுமையை நேரிற் கண்டறிந்த கிறிஸ்தவக் குலமாதர் இருவர் பெருந்துயருற்று நள்ளிரவிலேயே குருக்கள் பட்டிக்கு விரைந்து ஓடி ஆண்டுள்ள கிறிஸ்தவரிடம் தானைத்தலைவன் பிறப்பித்த கடுந்தண்டனையை அறிவித்துக் கண்ணீருகுத்துக் கதறினுர். முனிவர்க்கெய்திய ஆபத்தை அறிந்த ஊராரனைவரும் தாயிழந்த சேய்போல் அலக்கணுற்றுர். எங்கும் சோகமே பொங்கி நின்றது. அந்நிலையில் கிறிஸ்தவப் பெரியாரிருவர் படைத்தலைவனிடம் முனிவருக்காக மன்றுடத்துணிந்து புறப்பட்டார். அவருள் ஒருவர் இராசாக்கள் குலத்தைச் சேர்ந்தவர். மற்றவர் சிறந்த சொல்வன்மை வாய்ந்தவர்.

கொலைத் தண்டனை பெற்ற முனிவரது காவி அங்கியைக் காவலாளர் பறித்தனர்; வாயில் வந்தவாறு ஏளனம் பேசினர். அவர் மேனியில் கசையாலடிப்பதற்குக் கருங்கையினர் திரண்டனர். கொலைக்களத்திற்கு முனிவரைப் பிணித்துச் செல்வதற்கு விலங்கும் தயாராயிற்று. அந்நிலையில் குருக்கள்பட்டியினின்று போந்த இருவரும் தானைத்தலைவன் இருந்த பாசறையிற் புகுந்தார். முனிவர்க்காக அழுத்தமாக மன்றாடினர். இங்ஙனம் அன்பரிருவரும் பரிந்து பேசிய மொழிகளைத் தானைத்தலைவன் நன்கு செவியிலேற்றான்.

இவ்விருவரும் பாசறையில் வந்தெய்து முன்னமே முனிவர் இருப்பிடத்திற் கிடைத்த பொற்காசுகளைத் தானைத் தலைவன் மறைவாக அவ்வூர்ப் பொற்கொல்லனிடம் காட்டினான். அக்காசுகளை உற்றுநோக்கிய பொற்கொல்லன் அவற்றின் போலித்தன்மையை உணர்த்திய பொழுது அவன் அளவிறந்த மானமும் சீற்றமும் அடைந்தான். போலிக்காசுகளைக் கவர்ந்துவந்து பாசறையில் பல்லோரு மறியப் பொற்காசுகளெனக் காட்டிய தன் மைந்தனை வெறுத்தான். ஒன்னாரிடமிருந்து கவரும் பொருள் மன்னர்க்கு உரியதாகலின் பொற்காசுகளை எடுத்துக்கொண்டு போலிக்காசுகளைக் கொணர்ந்து ஏமாற்றியதாக மதுரை மன்னன் குற்றம் சாட்டித் தன்னை ஒறுப்பானோ என்று எண்ணி அஞ்சினான். இவ்வாறு கல் இடுக்கிற் கைவிட்டு வல்லுடும்பு பற்றிய மிடுக்கனைப் போன்று வீரமாமுனிவரது போலிக்காசைப் போக்கும் வழி யறியாது புலன்கலங்கி நின்ற நிலையில் அம்முனிவர்க்காகப் பெரியாரிருவர் பரிந்து பேசப் போந்தார்; அன்னார் பேசிய மொழிகளைக் கேட்டபின்னர் முனிவரது குற்றமற்ற தன்மையை உணர்ந்தவன்போல் முன் விதித்த கொலைத்தண்டத்தை மாற்றி முனிவர்க்குரிய பொருள்களை அப்பொழுதே ஒப்புவித்து விடை கொடுத்தனுப்பினான்.

தானைத்தலைவன் முனிவர்க்குக் கொலைத் தண்டம் விதித்தானென் றறிந்த பொழுது கயத்தாற்றவட்டத்தில் பெருங்குழப்பம் உண்டாயிற்று. புதிதாக இயேசுசமயத்தினை ஏற்றுக்கொண்டவர்கள் படர் கொம்பிழந்த கொடிபோல் வாடி வருந்தினர். இயேசுசமயத்தை ஒடுக்கக் கருதி முயன்றவர்கள் தானைத்தலைவன் ஆணை கேட்டு ஆர்வமும்

ஊக்கமும் உற்றார். இங்ஙனம் புதியதோர் ஊக்கமுற்றவருள் தலை சிறந்தவன் கயத்தாற்று வட்டத்தின் 'கவர்னராய்' அமைந்த அதிகாரியேயாவன். அவன் இளமைப் பருவத்தில் தூத்துக்குடிக் கிறிஸ்தவர் ஒருவரால் எடுத்து வளர்க்கப்பட்டவன். அவருதவியால் கல்வி பயின்று படிப்படியாக உயர்ந்து கயத்தாற்று வட்டத்திற்குக் கவர்னராயினான். பதவி ஏற ஏற கிறிஸ்தவர் செய்த நன்மையை அவன் அறவே மறந்தான்; தூத்துக்குடியிற் பெற்ற இயேசு சமய அறிவினைக் கொண்டே அச்சமயத்தைத் தூற்றத் தொடங்கினான்; பாளையத் தலைவராய மழவராயன் முதலியோர் வீரமாமுனிவரது சிறந்த நண்பராய் இருந்தமையால் அவரை அடக்கி ஒடுக்க இயலாது காலம் பார்த்து அமைந்திருந்தான். நாயக்கர் படைத்தலைவன் வீரமாமுனிவரையும் அவரைச் சார்ந்த தொண்டரையும் தன் பாசறைக்கு வரவழைத்துக் கொலைத்தண்டம் விதித்தான் என்றறிந்த பொழுது அளவிறந்த மகிழ்வுற்று ஆண்டு விரைந்து போந்தான்; நேரிய நெறியில் நின்று நீதி செலுத்திய தானைத்தலைவனை மனமாரப் புகழ்ந்தான்; கயத்தாற்றுப் பாளையத்திலமைந்த குடிகளுக்கு ஆர்வம் நிறைந்த திருமுகம் ஒன்றனுப்பினான். முன்னோர் ஆதரித்து வளர்த்த இந்து சமயத்தை அவர் பின்னோர் பொன்னே போல் போற்றும் பொறுப்புடையாரென்றும், மேலை நாட்டு விரிவிலா அறிவினர் சாற்றும் வெற்றுரைகளால் விபரீதம் விளையுமென்றும், அன்னார் இறுதியில் வீரமாமுனிவரைப் போலவே பின்னமுற்றொழிவரென்றும் அந்திருபம் அறிவுறுத்தியது. பொறுப்பு வாய்ந்த கவர்னர் விடுத்த நிருபம் கயத்தாற்று மன்றத்தில் பல்லோருமறியப் படிக்கப்பட்டது. ஊரார் அச்செய்தியைப் பாளையமெங்கும் பறைசாற்றினர். இயேசு சமயத்தாரிடம் பகைமைகொண்ட மக்கள் கவர்னர் விடுத்த திருமுகத்தைப் படித்து மதவெறியுற்றார். இயேசுசமயத்தைச் சார்ந்த மக்கள் வீரமாமுனிவர்க்கு நேர்ந்த கதியையும், அரசியலாளர் பகைமையையும் அறிந்து நெஞ்சம் குழைந்து அஞ்சி அயர்ந்தார். இவ்வாறு குழப்பமுற்றிருந்த பாளையத்தில் பொழுது புலரு முன்னமே கவர்னர் புகுந்து இயேசு சமயத்தைப் பலவாறு பழித்தும் இழித்தும் பேசினான். அவ்வுரை கேட்ட மாந்தர் வெகுண்டெழுந்து இயேசு சமயக் கோயிலை இடித்தனர்; முனிவர் மனையைப் பாழாக்கினர். இயேசு

நெறியை மேற்கொண்ட மக்களை அச்சுறுத்தினர்; சேர்வைக்காரனையும் பூசாரியையும் பலவாறு துன்புறுத்தினர்; நெற்றியில் நீறணியுமாறு இருவரையும் வற்புறுத்தினர். இவற்றையெல்லாம் பொறுத்து இயேசு சமயத்தினர் தம் நெறியை விடாது பற்றி நின்றார்.

கயத்தாற்றுப் பாளையத்தில் கவர்னர் மூட்டிய கடுங்கனல் சுற்றுப் புறங்களிலும் சென்று பற்றியது. தென்காசி என்னும் திரு நகரில் கிறிஸ்தவர் பலர் வாழ்ந்து வந்தனர். அந்நகர்க்குத் தலைவனுயமைந்த கவர்னர் அயலிடங்களில் இயேசுசமயத்தினர் அல்லற்படுதலை அறிந்து தானுந் தன்னுட்டில் இன்னல் விளைக்கத் தலைப்பட்டான். கிறிஸ்தவர் வீடுகளில் முத்திரையிட்டு அவ்வீடுகளிலுள்ளார் வெளிச் செல்லலாகாதென்றும், வெளியிலுள்ளார் அவ்வீடுகளிற் புகுதலாகாதென்றும் ஆணை பிறப்பித்தான். போர்வீரரோடும் பரிவீரரோடும் குருக்கள் பட்டியிற் போந்து புதையலகப்படுமா என்று துருவினுன். கருதிய பொருள் கையகப்படாமையால் ஏமாற்றமடைந்து சில கிறிஸ் தவர் வீடுகளில் கொள்ளையடித்து மீண்டான்.

சிறையினீங்கிய முனிவர் சிறிதும் இன்புற்றாரல்லர். மன்னுயிர்க்காகத் தன்னுயிர்வழங்கிய இயேசுநாதர் சேவையில் உயிர் துறக்கும் பேறு வாய்த்ததென்று உள்ளம் தழைத்திருந்த முனிவர் அவ்வாய்ப்பிழந்து வருந்தினுர். செம்மைசான்ற இயேசுசமயத்தினைத் தம் குருதி சொரிந்து வளர்க்க இயலாது ஒழிந்ததை நினைந்து மனந் தளர்ந்தார். ஓரியூரில் அருளானந்தர்க்குக் கிடைத்த அரும் பேறு கயத்தாற்றில் தமக்குக் கிட்டாத குறையை நினைந்து உருகினுர். எனினும் ஒல்லும் வகையால் கர்த்தர்பணி ஆற்றுதலே கடன் என்றுணர்ந்து குருக்கள் பட்டியை நோக்கி நடந்தார். சுடச்சுடரும் பொன்போல் படைவீரர் இழைத்த இன்னல்களால் மாசற்று மாண்புற்ற மதபோதகர் இருவரும் முனிவரைத் தொடர்ந்து சென்றார்.

குருக்கள்பட்டியில் ஒன்னர் இழைத்த தீமைகளை முனிவர் கண்டார்; இயேசு நெறியைத்தழுவி நின்ற மக்கள் யாண்டும் இடுக்கணுற்றுத் தளர்வதையும், இயேசுசமயப் பகைவர் ஆர்ப்பரித்துத் திரி

வதையும் கண்டு அகங் குழைந்தார். கயத்தாற்று வட்டத்தில் கர்த்தர் சமயத்தைக் கருவறுப்பதாக வஞ்சினம்பூண்டுநின்ற கவர்னரைக்கண்டு தம் குறைகளை நெஞ்சார முறையிட்டார். அரசியலாளர் ஏவலால் இயேசுசமயக் கோயில்கள் அழிவுறுதலாகுமோ என்று இரக்கமாக வினவினர். நெஞ்சுரங்கொண்ட அத்தலைவன் முனிவரது செஞ்சொற்களில் ஈடுபட்டானல்லன்; தொன்னெறியாய தன்னெறியைக் காத்தலே கடனெனக் கருதினன். 'கிறிஸ்துமதக் கோயில்களைத் தகர்த்தெறிந்தது தவறாயின் கர்த்தர் ஆறுமாத கால அளவில் என்னை ஒறுக்கக் கடவர்' என்று அறைகூவி அழைத்தான். தலைவனது வன்கண்மையை அறிந்து இரங்கிய முனிவர் குருக்கள்பட்டி நிலையத்திலமர்ந்து பழுதுற்ற திருச்சபையைப் பண்படுத்தத் தொடங்கினர்; கயத்தாற்றுக் கவர்னர் கொடுமையால் இயேசு நெறியை மேற்கொள்ள அஞ்சியிருந்த மாந்தரை மெல்லத் தேற்றி அவருள்ளங் கவர்ந்தார். ஓராண்டிற்குள் கயத்தாற்றுக் கவர்னர், மதுரை மன்னவன் சீற்றத்திற்கு ஆளாயினன். சில மாதங்கள் சிறையில் அடைக்கப்பட்டிருந்தான். பின்னர் நாட்டைவிட்டு ஓட்டப் பட்டான். கர்த்தர் கருணையால் கன்னெஞ்சத்தலைவன் அவ்வட்டத்தை விட்டொழிந்தானென்று கிறிஸ்தவர் களிப்புற்றார்.

இயேசு சமயம் தமிழ் நாட்டிற் பரவும்வண்ணம் வீரமா முனிவர் இடையறாது முயன்றார். திருமுதுகுன்றம் என்னும் பழம் பெயரையுடைய விருத்தாசலத்துக்கு ஆறு மைல் தூரத்தில் கோனான்குப்பம் என்ற சிற்றூர் அமைந்துள்ளது. அங்கு இயேசு சமயத்தார் ஒரு திருச்சபை நிறுவித் தொண்டாற்றி வந்தார்கள். அத் தொண்டு சிறத்தற்காகவும், பொதுமக்கள் மனத்தில் ஆர்வம் பிறத்தற்காகவும் முனிவர் அவ்வூரில் ஒரு மாதாகோவில் எடுத்தார். அக்கோவிலில் அமைந்த தேவமாதாவின் திருவுருவம் வீரமா முனிவர் வரைந்தனுப்பிய படத்திற்கிணங்க ஆக்கப்பட்டதென்பர். கருணை வடிவாய மரியம்மாள், தமிழ்நாட்டு மாதருடை தரித்து, மெய்ஞ்ஞான மகவாய இயேசுநாதரைத் திருக்கரத்திலேந்தி நிற்கும் கோலத்தில் அவ்வடிவம் அமைந்திருக்கின்றது. பெருமைவாய்ந்த அம்மாதாவைப் பெரியநாயகிஅம்மாள் என்று முனிவர் அழைத்தார். ஆண்டுதோறும்

நிகழ்ந்துவரும் பெரியநாயகி திருநாளில் இன்றும் கிறிஸ்தவர்கள் பெருந் தொகையினராய்ச் சென்று வழிபடுகின்றார்கள்.

இங்ஙனம் கோனான்குப்பத்தில் அமைந்த மாதாவின் திருவருளைத் துணைக்கொண்டு முனிவர் தேம்பாவணி என்னும் காவியத்தை இயற்றத் தொடங்கினர். உலகமுய்ய "அவதரித்த நாதனைக் கைத் தாதையாய் வளர்த்த சூசையென்னும் வளன் சரிதை"யை மூவாயிரத்து அறுநூற்றுப்பதினைந்து விருத்தப் பாக்களால் அந்நூல் விரித்துரைக்கின்றது. முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோல் அக்காவியத்தில் போற்றப்பட்டுள்ளன. சிந்தாமணியின் செழுஞ்சுவையும், கம்பர் காவியத்தின் கவிச்சுவையும், திருக்குறளின் தெள்ளிய நலமும், தேம்பாவணியில் அமைந்து திகழும் நலத்தினை ஆராய்ந்து அறிவது தமிழ் மாணவர்க்கு நல்விருந்தாகும்.

வீரமாமுனிவரது கவித் திறத்தினைக் குறித்துப் பல கதைகள் வழங்குகின்றன. வீரமாமுனிவர் தேம்பாவணியை இயற்றி மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றினரென்றும், அதன் சொல் நயம் பொருள் நயங்களை அறிந்து வியந்த அருந்தமிழ்ப் புலவர்கள் அடிகளுக்கு வீரமாமுனிவரென்னும் பட்டம் அளித்தனரென்றும் ஒரு கதை கேட்கப்படுகின்றது. இவ்வாறன்றி "வீரமாமுனிவர் பாடிய பெருங்காப்பியத்தைக் கண்டு வியந்த வித்வான்களும் அவருடைய மாணாக்கர்களும், அவர் பாடிய பனுவலுக்குக் குரு வணக்கம் சொல்லவேண்டுமென்று விரும்பி அவர் அநுமதிப்படி அந்நாள் வரையும் அவருக்கு வழங்கி வந்த தைரியநாத சுவாமி என்ற பெயரில் தைரியத்திற்கு வீரமென்றும், காமாதிகளை முனிந்து வென்றவராதலால் முனிவரென்றும், ஒரு காரணப்பெயர் அமைத்து வணக்கங் கூறலாயினர்" என்று மற்றொரு வரலாறு கூறுகின்றது.

வீரமாமுனிவரிடம் கல்வி கற்ற மாணவரில் நால்வர் அவர் பாடும் நாலடிகளை நாலேட்டில் எழுதுவாரென்றும், அவற்றைச் சேர்த்து ஐந்தாம் மாணவன் சுவடியாகத் தொகுப்பானென்றும் ஒரு கதை உரைக்கின்றது. தேம்பாவணி, இயேசுநெறியை மேற்கொண்ட மக்களாற் பெரிதும் பாராட்டப்படுகின்றது. "வேதாகம நியாயங்

களை விரித்து, விரோத சங்கைகளை அறுத்து, மெய்ஞ்ஞான போதங்களை விளக்கி, அஞ்ஞான மார்க்கங்களை அகற்றி, அநேக வித சரிதைகளை அடக்கி, சிறந்த கட்டுரையாய்த் தெவிட்டாத மதுரமாய், தெளிந்த கருத்தாய்ச் செப்பரும் பொருளாய், சகல அலங்காரத்தோடு தொகுத்து (வீரமாமுனிவர் தேம்பாவணி) பாடியிருக்கின்றார். அப்பெருங் காப்பியத்தைப் படித்தும் கேட்டும் உணர்ந்தோர் கடவுளளித்த மெய்ம்மறை தெளிந்து, அறவழி நடந்து கசடெலாம் கடந்து கதிபெற்று வாழ்வர்'' என்று தேம்பாவணியின் திறத்தினைத் தமிழறிஞர் ஒருவர் வியந்து மகிழ்ந்தார்.

தேம்பாவணியின் பொருள் செவ்வனம் விளங்குதற்பொருட்டு வீரமாமுனிவரே அதற்குப் பதவுரையும் பொழிப்புரையும் எழுதி உதவினர். உயரிய செந்தமிழ் நடையிலமைந்த அக்காவியத்தின் சுவையறிய இயலாத பொதுமக்கள் அதன்கண்ணமைந்த காதையை அறிந்து நலமுறுதற்பொருட்டுத் 'தேம்பாவணி வசனகாவியம்' எழுதப்பட்டது. இன்னும் 'தேம்பாவணிக் கருப்பொருள்' என்னும் உரைநடை நூலும், 'தேம்பாவணிக் கீர்த்தனைகள்' என்னும் இசைப் பாட்டும் முதல் நூலைத் தழுவி எழுந்தனவாகும். தேம்பாவணியின் சில செய்யுள்களைச் சென்னைக் கலெக்டராயிருந்த செந்தமிழ் அறிஞர் எல்லீசர் என்பார் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். தூபியர் என்னும் பெரியார் மூன்று காண்டங்களாயமைந்த தேம்பாவணியின் பொருளைப் பிரெஞ்சு மொழியில் சுருக்கமாக எழுதி அமைத்தார்.

நாயக்கர் ஆளுகையில் அமைந்த மதுரைச் சீமையிலும், சேதுபதியின் காவலின் அமைந்த சேது நாட்டிலும், தொண்டைமான் ஆட்சிக்குட்பட்ட புதுக்கோட்டை நாட்டிலும், மராட்டிய மன்னர் ஆண்ட தஞ்சை நாட்டிலும் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நிகழ்ந்த குழப்பங்களும் கலகங்களும் இயேசு சமயத் திருத்தொண்டிற்குப் பெரிதும் இடையூறு விளைத்தன. மாறுபட்ட மன்னர் கொடுமையால் பல மாதா கோயில்கள் இடியுண்டு அழிந்தன. நாட்டில் குறுக்கும் மறுக்கும் திரிந்த படை வீரர், கண்ணிலகப்பட்ட பொருள்களைக் கவர்ந்து சென்றார். பஞ்சத்தாலும் நோய்களாலும்

குடிகள் நலிவுற்றார். அக்காலத்தில் இயேசு சமயத் திருச்சபையார் பட்ட பாட்டை அறிந்து கொள்வதற்கு ஒரு சான்று போதியதாகும்.

தொண்டைமான் நாட்டிலுள்ள ஆவூரில் ஒரு திருச்சபை இருந்தது. அவ்வூர்க்கருகே ஐந்து மன்னருடைய சேனை போருக்கு ஆயத்தமாய் நின்றன. தொண்டைமான் சேனை ஒன்று; சேதுநாட்டுச் சேனை ஒன்று; மதுரைச் சேனை ஒன்று; தஞ்சைச் சேனை ஒன்று; மகமதிய சேனை ஒன்று; ஆக ஐந்து படைக்கும் நிலைக்களமாய் நின்ற ஆவூரில் மைக்கேல் அடிகள் என்னும் முதியவர் சமயப்பணி செய்துகொண்டிருந்தார். வீரமாமுனிவர் அடிக்கடி ஆண்டுப் போந்து அவர்க்கு உதவி புரிந்து வந்தார்; ஆவூர் நிலையத்திற்குரிய பொருள்களைப் படைவீரர் கவர்ந்து கொள்ளாமல் கண்ணுங் கருத்துமாய்க் காத்து வந்தார். சூறையாடும் கருத்துக்கொண்டு படைவீரர் திருச்சபையை நெருங்கும் பொழுது வீரமாமுனிவர் விரைந்து சென்று அவருடன் வாதித்துத் தம் வாக்குவன்மையால் அவரைப் போக்குவார். ஒரு நாள் ஆவூர்க் கள்வர்கள் தங்களுக்குரிய மாடுகளைக் கவர்ந்து சென்றாரென்று சீற்றமுற்ற மகமதியப் படைவீரர் அவ்வூரினுள்ளே புகுந்தனர். அகப்பட்டோரை யெல்லாம் வெருட்டினர். அன்னார் சீற்றங்கண்ட ஆவூர்க்குடிகள் சிந்தை கலங்கி நின்றார். அதனை அறிந்த வீரமாமுனிவர் வழக்கம்போல் படை வீரருடன் வாதாடக் கருதித் தனியராய் வெளிப்பட்டார். 'கள்வர்கள் மாட்டைக் கவர்ந்து சென்றால் ஆவூர்க்குடிகள் என்செய்வர்' என்று அழுத்தமாக வாதித்தார். ஆயினும், மாட்டை இழந்து மனங்கொதித்திருந்த படைவீரர் செவிகளில் முனிவர் மொழிகள் ஏறவில்லை. 'களவு போன மாடுகள் வரவேண்டும்; இன்றேல், பரிந்து பேசிய முனிவரே பாசறையிற் போந்து தண்டத் தலைவரிடம் ஏற்ற மாற்றம் உரைத்தல் வேண்டும்' என்று வீரர் வேகமுறப் பேசினர். அன்னார் மொழிகளை அமையக் கேட்ட முனிவர் இறையளவும் அஞ்சினாரல்லர்; படை வீரர் பின்னே பாசறையை நோக்கி நடந்தார். முனிவர் பெருமை அறியாத முரடர்கள் அவரைக் குற்றவாளி போல இட்டுச் சென்றார்கள். மிகுதியால் மிக்கவை செய்வாரைத் தம் தகுதியால் வெல்லும் சீலம் வாய்ந்த முனிவர் அன்னார் பேசிய புன் மொழிகளனைத்தையும்

பொறுத்து வழி நடந்தார். பாசறையைச் சேர்ந்தபொழுது முனிவரை வெளியே நிறுத்தி வீரர் உள்ளே சென்றனர். நண்பகற்பொழுதில் நீரும் நிழலுமற்ற வெட்டை வெளியில் கதிரவன் வெம்மையைப் பொறுத்து முனிவர் நெடுநேரம் காத்து நின்றார். பாசறையினுள்ளே இருந்த தண்டத் தலைவனால் அனுப்பப்பட்ட ஒரு சேவகன் முனிவரிடம் போந்து 'வாக்கு மூலம்' பெற்று, தலைவனிடம் அறிவித்தான். "பழியொரு பக்கம் பாவமொரு பக்கம்" என்னும் பழமொழிக்கிணங்க மாடு கவர்ந்த கள்வரைக் கண்டறியமாட்டாத படை வீரர், குற்றம் ஒன்றும் புரியாத நற்றவ முனிவர் ஒருவரைக் கொணர்ந்தாரென்றறிந்த தலைவன் உடனே அவரை விடுவிக்க ஆணை பிறப்பித்தான். தண்டத் தலைவன் அன்புகூர்ந்து பிறப்பித்த ஆணையைச் சேவகர் வாயிலாக அறிந்த முனிவர் அவன் பெருந்தன்மையை வியந்து அவனைக் காண விரும்பினார். முனிவர் கருத்தறிந்த தண்டத் தலைவன் அவரை அழைத்து வரப் பணித்தான். பாசறையிற் போந்த முனிவரைத் தலைவன் முகமலர்ந்து வரவேற்று அருகேயிட்ட சரியாசனத்தில் அமர்த்தி அன்போடு உரையாடத் தொடங்கினான். படை வீரர் செய்த புன்மைகள் தன் ஆணையின்றி நிகழ்ந்தன என்று பன்முறை அழுத்தமாக உரைத்தான். நெடும்பொழுது முனிவர் மனம் குளிரப் பேசித் தன் பரிசனங்கள் செய்த சிறுமைக்குக் கழுவாயாக முனிவர்க்குச் சில பரிசுகள் வழங்கி அனுப்பினான்.

தண்டத் தலைவன் முனிவர்க்குச் செய்த உபசாரங்களைக் கண்டும் கேட்டும் அறிந்த படை வீரர் அவர் பாசறையினின்று திரும்பும்பொழுது பணிந்து நின்று வரவேற்றார். காலையிற் கண்ட வன்முகங்கள் மாலையில் இன்முகங்களாய் இலங்கின. முற்பகலில் தூற்றிய வாய்கள் பிற்பகலில் புகழ்ந்து போற்றுவனவாயின. மகமதியப் படையின் சேனாபதியாய சந்தா சாய்பைக் கண்டு அவர் ஆதரவு பெற்றாலன்றிப் போர் வீரர் புரியும் கொடுமைகளைத் தடுக்குமாறில்லை என்றுணர்ந்த முனிவர் தண்டத் தலைவனை மீண்டும் கண்டு சந்தரிடம் தன்னை அறிமுகம் செய்விக்குமாறு வேண்டினார். அவனும் அவ்வாறு செய்வதாக வாக்களித்துச் சந்தரைச் சென்று காண்பதற்கு நாளும் பொழுதும் குறித்தான். குறித்த பொழுதில் முனிவர் சந்தரைக்

கண்டார். தன் குறைகளை அவனிடம் முறையிட்டார். முனிவரது சொல்லின் திறம் சந்தருள்ளத்தைப் பிணித்தது; "கற்றல் கேட்டல் உடையார் பெரியார்" என்றெண்ணி அவர் கேண்மையை விரும்பினான். இறைவன் கருணையாலேயே மகமதிய சேனுபதியின் பழக்கம் தமக்கு வாய்த்ததென்றெண்ணி முனிவர் இன்புற்ருர்.

பன்முறை கண்டு பேசிப் பழகிய சந்தரும் முனிவரும், ஒருவரையொருவர் மதிக்கத்தலைப்பட்டனர். முனிவரிடம் கொண்ட மதிப்பிற்கு அடையாளமாக இயேசு சமய போதகர்க்கும் குருமார்க்கும் மகமதியப் படைகள் எவ்வகைத்தீங்கும் செய்தலாகாதென்று சந்தர் ஆணை பிறப்பித்தான். அவர்கள் இடையூறின்றி யாண்டும் சென்று பணி ஆற்றுதற்குச் சாதனமாய் சீட்டெழுதி முனிவர்கையிற் கொடுத்தான். முனிவர் பெறுதற்கரிய பேறு பெற்ருரென்று இயேசு சமயத்தார் வியந்து மகிழ்ந்தார். சந்தருடன் இனிதுபேசி அவருள்ளங்கவர்தற்கு முனிவர் பாரசிகத்தையும் இந்துஸ்தானியையும் மூன்று மாத காலம் முயன்று பயின்ருரென்றும், அம்மொழிகளில் அவர் வாழ்க்கையின் மாசிலா மாண்பினைக் கண்டு வியந்த சந்தர் 'இஸ்மதி சன்னியாசி' என்ற சிறந்த பட்டமளித்து ஒரு தந்தப்பல்லக்கும் பரிசாகக் கொடுத்தான் என்றும் ஒரு வரலாறு வழங்குகிறது. மேலும் திருச்சிராப்பள்ளிச் சீமையைச் சேர்ந்த உக்களூர், மால்வாய், அரசூர், நல்லூர் ஆகிய நான்கு கிராமங்களையும் சந்தர் முனிவர்க்குச் சர்வ மானியமாக அளித்து திவான் உத்தியோகமும் கொடுத்தான் என்று அவ்வரலாறு கூறுகின்றது.

இங்ஙனம், மகமதிய சேனுபதியின் நன்மதிப்பினை வீரமா முனிவர் பெற்ற பின்னர் மகமதிய சேனை சென்ற இடங்களில் அமைந்த இயேசு சமயக் கோயில்கள் ஏதமின்றி இருந்தன. படைகள் நாட்டிற் புகுந்து விளைபுலங்களை அழித்து ஊர்களைச் சூறையாடும் பொழுது, படை வீரர்கள் திருக்கோவில்களைப் பண்புறப் பாதுகாத்தனர். மகமதிய சேனுபதி முனிவர்பால் வைத்திருந்த மதிப்பிற்கு ஒரு சான்று போதியதாகும். ஒரு நாள் சந்தர் தலைமையிலமைந்த மகமதிய சேனை ஆவூருக்கருகே போந்திருந்தது. அப்படை வீரருட் சிலர் ஊரினுள்ளே புகுந்தார். ஆண்டு ஒருபால

மைந்த தென்னந் தோப்பினுள்ளே நுழைந்து செம்மாந்த தெங்கின் இளநீரைக் கண்டு வாயூறிச் சில குலைகளைப் பறித்துப் பருகி ஆண்டு கிடந்த சில மட்பாண்டங்களையும் கவர்ந்து சென்றார். இயேசு சமயத்தார்க்குரிய தோப்பிற் புகுந்து திருக்கோவிற் பொருள்களைப் படைவீரர் கவர்ந்தாரென்றிந்த சேனாபதி அன்னாரை இருப்புக்கோலால் ஒறுக்குமாறு பணித்தான். அடி வாங்கிய படைவீரரைப் பாசறையிலுள்ளார் அனைவரும் காணச் சேவகன் வெளியே நடத்திச் சென்றான். இயேசுசமய போதகர் அறப்பணிசெய்யும் ஆன்றோராக மதித்தற்குரியரென்று அவ்வீரருடன் சென்ற சேவகன் பறை அறைந்தான். இத்தகைய தவறுகள் பின்னர் நேராதவாறு சேனை செல்லுமிடந்தோறும் சந்தர் திருக்கோவில்களைக் காத்தலிற் கருத்துடையவனாய் இருந்தான். தமிழ் நாட்டில் சந்தர் சேனாபதியாய்ச் சீரும் சிறப்பும் உற்றிருந்த காலமே, வீரமாமுனிவர் சிறந்த செல்வாக்குடன் விளங்கிய காலமாகும். அக்காலத்தில் அவர் ஏற்றத்தையும் தோற்றத்தையும் கற்பனைத்திறனுடைய அன்பர் ஒருவர் நன்கு எழுதியுள்ளார்.

“வீரமாமுனிவர் மடத்திலிருக்கும் போது கோபிச்சந்தனம்நெற்றியிலிட்டுக்கொண்டு, தலைக்குச் சூரியகாந்திப் பட்டுக்குல்லாவும், அரைக்கு நீர்க்காவிச் சோமனும், காலிற் பாதக்குறடும் போட்டுக்கொண்டிருப்பார். இவர் வெளியே புறப்படும்போது, பூங்காவி அங்கியும், பூங்காவி நடுக் கட்டும், வெள்ளைப் பாகையும், இளங்காவி உத்தரிய முக்காடும், கையினிற் காவி உறுமாலும், காதில் முத்துக் கடுக்கனும், கெம்பொட்டுக்கடுக்கனும், விரலிற் தம்பாக்கு மோதிரமும், கையில் தண்டுகோலும், காலில் சோடும் அணிந்துவந்து பல்லக்கின் மெத்தையின் மேலிட்டிருக்கும் புலித் தோலாசனத்தின் மேல் எழுந்தருளுவார். இவர் இறங்குமிடங்களிலும் புலித்தோலாசனத்தின்மேல் உட்கார்வார்.”

மகமதிய சேனாபதியின் திவானாக வீரமாமுனிவர் விளங்கிய காலத்தில் இன்னும் சில எடு பிடிகளும் விருதுகளும் சேர்ந்தனவாம். மேற்சொன்ன சிறப்புக்களோடு “பீதாம்பரத்தாற் செய்த பன்னிரண்டு குமரவ கணக் கொடியும், நாலு வெள்ளித் தடிகளும்,

முப்பது குதிரைமேற் சேவகரும், குதிரைமேல் டங்காவும், நாதசுரமும், முன்னே நடக்க அர்க்கார் டலாயத்துகள் முன்னோட, பின்னாலே ஓர் ஒட்டகத்தின்மேல் நகராவும், ஓர் ஒட்டகத்தின் மேல் கைத்தாளமும் முழங்க, மற்றொரொட்டையின்மேல் பூசை பண்ணுதற்கு வேண்டிய வஸ்திர பாத்திர முதலாகிய வஸ்துக்களும், மூன்று ஒட்டையின்மேல் கூடாரங்களும் மற்றச் சாமான்களும் சேர்ந்துவர, முனிவர் செல்வார். இவர் இறங்குகிற இடங்களிலும், நவாபுக் கச்சேரியிலும், புலித்தோலாசனத்தின்மேல் உட்கார்ந்திருப்பார்."

இங்ஙனம், வீரமாமுனிவரது சரித்திர ஆசிரியர் எழுதிக் காட்டிய ஆடம்பரக்கோலம் விரதியாய முனிவரிடம் விளங்கியிருத்தல் கூடுமோவென்று ஐயுறுவார் பலராவர். மகமதிய சேனாபதியின் ஆட்சியில் முனிவர், நல்லூர் முதலிய நான்கு ஊர்களை மானியமாகப் பெற்று பொறுப்பு வாய்ந்த பதவியையும் ஏற்றாரென்பதற்கு இயேசு மட நிருபங்களில் எவ்வகை ஆதரவும் காணப்படவில்லை. வாய் கடக்குந் தோறும் வளர்ந்தோங்கும் இயல்பிற்றாய கர்ணபரம்பரைக் கதையைத் தவிர முனிவர் விரசு கோலம் தாங்கி நின்றார் என்பதற்கு வேறு சான்றில்லை. எனினும் முனிவர் சந்தரோடுறவு பூண்டிருந்தாரென்றும், சந்தர் வாயிலாக ஆர்க்காட்டு அரசனையும் அறிந்து அவன் ஆதரவைப் பெற்றிருந்தாரென்றும், இயேசு மட நிருபமொன்று குறிக்கின்றது. ஆர்க்காட்டு அரசர் வீரமாமுனிவரை ஆன்ற மதிப்புடன் வரவேற்று ஆதரித்தார் என்றறிந்த ரோமாபுரிப் போப் பென்னும் பெருந் தலைவனார் அவ்வரசர்க்கு ஒரு திருமுகத்தின் வாயிலாக நன்றி செலுத்தினார். பொதுவாக இயேசுமடத்தாரிடமும், சிறப்பாக வீரமாமுனிவரிடமும், அரசர் காட்டிய அன்பை உரிய முறையில் அவர் அந்நிருபத்தில் பாராட்டி யுள்ளார். இன்னும், ஆர்க்காட்டு மன்னரின் சேனாபதியாய சந்தர் இயேசுமடத்தார்க்கு மனவுவந்து உதவிபுரியும் மாண்பு வாய்ந்தவராய் விளங்கினார் என்பது ஒரு செய்தியால் உணரப்படும்.

மலபார் மாகாணத்து இயேசுமடத்தார்க்குரிய தென்னந்தோப்பு முதலிய சொத்துக்கள் எல்லாம், கோவா நகரைக் கைப்பற்றிய மராட்டியச் சேனையின் வசப்பட்டமையால் அம்மடத்தைச் சார்ந்தா

ரனைவரும் பொருளின்றிக் கவலையுற்றார். கடன்பட்டாலன்றிச் சமயக் கடமைகளைச் செய்ய முடியாத நிலை வந்துற்றபோது அம் மடத் தலைவராய சான்றோர் இயேசுமத அன்பருதவியை நாடினர். அந்நிலையில் மதுரைச் சீமையில் அமர்ந்திருந்த சந்தா, சாந்தோம் என்னும் செம்பொற்காசுகளில் 350 நன்கொடையாக வழங்கினார். மகமதிய வீரர், காலத்தில் செய்த உதவியை அம்மடத்தார் ஞாலத்திற் பெரிதாகக் கருதி நன்றி செலுத்தினர். இங்ஙனம் சந்தா இயேசு நெறியை ஆதரித்தமையால் அவருக்கும் வீரமாமுனிவர்க்கும் இருந்த கேண்மையைக் கற்பனை நயம்வாய்ந்த மக்கள் பலவாறாகப் புனைந்துரைத்தாரென்று கருதுதல் மிகையாகாது. அன்றியும் ஆண்டுதோறும் பன்னீராயிரம் ரூபாய் வருமானமுள்ள நான்கு ஊர்களை முனிவர் நன்கொடையாகப் பெற்றாரென்பது நம்பத்தக்க செய்தியாகத் தோன்றவில்லை. வறுமையில் வாழும் விரதம்பூண்டு, ஆசை மூன்றையும் அறவே அறுத்து, மாட்டுக்கொட்டிலிற் பிறந்த இயேசுநாதரின் இணையடி தொழுது, உற்ற நோய் நோன்று, உயரிய தவநெறியில் நின்ற இயேசுமத அடிகள், பொன்னையும் பொருளையும் பெரிதாக மதித்து, அல்லல் விளைக்கும் அரசியற் பணிகளிற் புகுந்து ஆடம்பரமாய் வாழ்ந்தாரென்று கருத இடமில்லை. ஒருகால் நேசப் பான்மையால் சந்தா மனமார்ந்தளித்த சில பட்டங்களையும், சிறு பரிசுகளையும் முனிவர் பெற்றிருத்தல்கூடும். அரசாங்கத்தில் பொறுப்பு வாய்ந்த திவான் பதவியை ஏற்று நிர்வாகத் தொல்லைகளை அவர் மேற்கொண்டாரென்று கருதுதல் பொருந்தாது.

சந்தா செழுமையுற்றுத் தமிழ்நாட்டில் வாழும் காலத்து முனிவர் இயேசுசமய சபைகளைச் செம்மைப்படுத்தினார். தஞ்சையில் மராட்டிய மன்னர் கொடுமையால் நலிவுற்றுத் தளர்ந்திருந்த இயேசுசமயம் இப்பொழுது தலையெடுத்து வளர்ந்தோங்கத் தொடங்கிற்று. ஆயினும் சந்தாது ஆதிக்கம் நெடுங்காலம் நிலைத்து நிற்கவில்லை. வடபுலத்து மராட்டியப் பெரும்படை தென்புலத்தை நோக்கி வந்தது. ஆர்க்காட்டு அரசன் மராட்டிய வெள்ளத்தைத் தடுக்க முயன்று தோல்வியுற்று அமர்க்களத்தில் உயிர் துறந்தான். தென்னாட்டிற் போந்த அப்படையை ஒல்லும் வகையால் முயன்றும் வெல்ல

இயலாத சந்தர் மராட்டியத் தலைவனிடம் சரணடைந்தார். மராட்டியர் சந்தரைச் சதராவிற் கொண்டு சிறைவைத்தார். சிறையினின்றும் தப்பி திரிசிரபுரம் போந்த சந்தர் முனிவரை ஆதரிக்கும் முறையில் சிறிதும் தளர்வுற்றாரல்லர்.

இனி, முனிவர் தமிழ் மொழிக்குச் செய்துள்ள பணியின் திறத்தைச் சிறிது பார்ப்போம். வீரமாமுனிவரே தமிழ் அகராதியின் தந்தையாவார் என்று கூறுவது மிகையாகாது. தமிழ் மொழியில் அமைந்த சொல்லின் பொருளை அறிந்துகொள்வதற்கு முற்காலத்தில் நிகண்டுகளே சிறந்த சாதனமாயமைந்தன. பிங்கலம், திவாகரம், சூடாமணிமுதலிய பலநிகண்டுகள், தமிழ் மொழியில் விளங்கக் காணலாம். நூற்பாவால்அமைந்த அந்நிகண்டுகள் யாவும் கற்றோர்க்கேயன்றி மற்றோர்க்குப் பயன்படாதனவாயின என்பது சொல்லாமலே விளங்கும். கவிபாடும் புலவர்க்கும்,பொருள்தேறும் அறிஞர்க்குமே அவை பெருந்துணையாயிருந்தன. கற்றோரேயன்றி மற்றோரும் தமிழின் சொல்வளத்தை எளிதில் அறியும் வண்ணம் வீரமாமுனிவர் 'சதுர் அகராதி' என்னும் பெயரால் ஒரு சிறந்த அகராதி செய்து உதவினர். அவ்வகராதி நூற்பாவால் அமைந்த நிகண்டுகள் போலாது, தமிழ்ச்சொற்களை அகரமுதலாக எடுத்தடுக்கிப் பொருள் விளக்கிய பான்மையால் தமிழ்ப்பெருங்கடற்கு அஃது ஓர் மரக்கலமாகத் திகழ்ந்ததென்று அந்நூற்பாயிரம் குறிக்கின்றது. அவ்வகராதி அளவிற் சிறிதாயினும் அருமை வாய்ந்ததென்பதில் ஐயமில்லை.

அரியதோர் அகராதி தொகுத்துத் தண்டமிழ் மொழிக்குத் தொண்டுசெய்த வீரமாமுனிவர், நன்னூல் முதலிய பன்னூல்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, தொன்னூல் விளக்கம் என்னும் பெயரால் ஒரு செந்தமிழ் இலக்கணம் செய்தருளினர். எழுத்து முதல் அணியீறுகவுள்ள ஐந்திலக்கணங்களையும் அந்நூல் அழகுறத் தொகுத்துரைக்கின்றது. நன்னூல் போலவே அந்நூலும் நூற்பாவால் அமைந்துள்ளது. நூல்வழக்கில் அமைந்த செந்தமிழ் மொழியின் திட்பநுட்ப முணர்ந்து ஐந்திலக்கண நூலும் உரையும் எழுதிய அருந்தமிழ் முனிவர், உலக வழக்கிலமைந்த தமிழையும் இனிதறிந்து, 'கொடுந்தமிழ் இலக்கணம்' ஒன்று லத்தீன் மொழி

யில் வரைந்துதவினுர். இவ்விலக்கணம் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றது. தமிழ் மொழியைப் பிழையறப் பேசவும் எழுதவும் கருதி முயலும் பிறநாட்டறிஞர்க்கு இந்நூல் பேருதவி யாக நிற்பதாகும். பழம் பெருமை வாய்ந்த தமிழ் மக்கள் பண்பினை மேலை நாட்டுக் கலைவாணரும் இனிதுணருமாறு, தெய்வப்புலமைத் திருவள்ளுவனுர் இயற்றிய திருக்குறளின் அறத்துப்பாலையும் பொருட்பாலையும், வீரமாமுனிவர் லத்தீன் மொழியிற் பெயர்த் தமைத்தார் என்பர். இன்னும் இவர் இயற்றிய காவலூர்க்கலம்பகம், கித்தேரியம்மானை ஆகிய சிறு காப்பியங்களின் பெருமை 'திருக்காவ லூர்க் கோவி'லைக் கற்றுணர்வார்க்கு நன்கு விளங்கும்.

இயேசு சமய வேதாகமங்களைக் கற்றுத் துறை போகிய நற்றவச் செல்வராகிய வீரமாமுனிவர், பிற சமயத்தைச் சார்ந்த மக்களைத் தம் நெறியிற் சேர்த்தற்பொருட்டு, அவர் நூல்களையும் நன்கு அறிந்திருந் தாரென்பர். இதற்குச் சான்ருக வழங்கும் கதையொன்று அறியத் தக்கதாகும். சோழநாட்டிலமைந்த புள்ளிருக்குவேளூர் பாடல் சான்ற பழம் பதியாகும். அப்பதியில் திருக்கோவில் கொண்டரு ளும் ஈசன், தீரா நோய் தீர்த்தருளவல்லான் என்று தேவாரப் பாசுரம் கூறுகின்றது. அப்பதியிலமைந்த திருக்கோவில் வினைதீர்த்தான் கோவில் என்று வழங்குகின்றது. இத்தகைய பெருமை வாய்ந்த புள்ளி ருக்குவேளூரின் வழியாகச் சென்ற வீரமாமுனிவர் திருக்கோவிலில் அமர்ந்த வைத்தீஸ்வரன் பெருமையை அவ் ஊரார் சொல்லக் கேட்டு,

"வாதக் காலாம் தமக்கு மைத்துனற்கு நீரிழிவாம்
போதப் பெருவயிறம் புத்திரற்கு—மாதரையில்
வந்த வினைதீர்க்க மருந்தறியான் வேளூரான்
எந்த வினைதீர்த்தான் இவன்."

என்ற பாட்டைப் பாடினுரென்றும், ஐரோப்பிய நாட்டார் ஒருவர் வைதிக சமய ஐதிகங்களையறிந்து இன்கவி இயற்றக்கண்ட புள்ளிருக் கும் வேளூர்ப் புலவர்கள் வியந்து நின்றுரென்றும் வீரமாமுனிவர் சரித்திரம் கூறுகின்றது.

இன்னும் கல்விப் பெருக்காற் செருக்குற்ற பெருஞ்சடைப் பண்டாரங்கள் ஒன்பதின்மர் வீரமாமுனிவரோடு வாதித்து அவரை

வெல்லக் கருதித் திருக்காவலூரை யடைந்தார்கள். அன்னாரோடு வாது செய்ய இசைந்த முனிவர், வென்றவர் சொற்படி தோற்றவர் நடப்பதென்ற ஒப்பந்தம் செய்துகொண்டு வாதுசெய்யத் தலைப்பட்டார். இருதிறத்தாருக்கும் ஒரு மாதகாலம் பெருவாதம் நிகழ்ந்தது. இறுதியில் முனிவர் வென்றார். தோற்ற பண்டாரங்களில் அறுவர் இயேசு சமயத்தை ஏற்றுக்கொண்டனர். மற்ற மூவரும் தாம் தோற்றதற்கு அடையாளமாக முனிவர் விரும்பியவாறு தம் சடைகளை அறுத்து திருக்காவலூர் மண்டபத்தில் போட்டுவிட்டு விடைபெற்றுப் போயினர். இச்செய்தி வீரமாமுனிவர் சரித்திரத்தில் குறிக்கப் பட்டிருக்கின்றது.

தென்னாட்டில் சந்தா சாய்பின் ஆதிக்கம் நிலைகுலைந்தபொழுது அவர் அன்பிற்குரியராயிருந்த வீரமாமுனிவர் அமைதியான ஓரிடத்தில் அமர்ந்து பணி செய்யக் கருதினாராதலால் முத்துக்கரையிலமைந்த தூத்துக்குடிக்கு மாற்றப்பட்டார். அக்காலத்தில் தூத்துக்குடிக்கு அண்மையிலமைந்த மணப்பாடே முத்துக்கரை மடத்தின் நிலையமாய் விளங்கிற்று. பொறுப்புமிக வாய்ந்த தலைமை நிலையத்தில் நூலியற்றுதற்குப் போதிய அவகாசம் கிடையாதென்றறிந்து முனிவரைத் தூத்துக்குடிக்கு மாற்றினர்போலும். இங்கிலையத்திலிருந்தே முனிவர் தமிழ்—லத்தீன் அகராதியை முடித்தார் என்று கருதப்படுகின்றது. இவ்வகராதி முற்றுப்பெறுவதற்கு நெடுங்காலம் முனிவர் கடும்பணி புரிந்தார் என்று இதன் பாயிரம் குறிக்கின்றது. இவ்வாறு தூத்துக் குடியில் ஏற்ற பணியை நிறைவேற்றிய பின்னர், மேல் கரையைச் சேர்ந்த கொடுங்கோளூரை அடுத்த அம்பலக் காட்டில் நிறுவப் பட்டிருந்த இயேசுநெறிக் கல்லூரியின் மேற்பார்வையாளராக முனிவர் நியமிக்கப்பட்டார். இயேசு சமய போதகரைப் பயிற்றுதற்குரிய சிறந்த கல்லூரியும், அச்சமயக் கொள்கைகளை யாண்டும் பரப்புதற்கேற்ற தமிழ் அச்சுக்கூடமும் அம்பலக் காட்டில் அமைந்திருந்தமையால் அச்சிற்றூர் இயேசு சமயத்தார்க்குச் சிறந்த ஊராய்த் திகழ்ந்தது. வீரமா முனிவர் ஆண்டு பணிசெய்யப் போந்தபொழுது அவரொழிய எழுவர் அப்பணியில் ஈடுபட்டிருந்தாரென்று தெரிகின்றது. முப்பத்தைந்து ஆண்டுகட்கு மேலாக இடையறாப் பணியாற்றி

மூப்பெய்திய முனிவர் எத்துணை காலம் கல்லூரியில் இலங்கு நூல் பயிற்றினுரென்று அறிதற்குரிய ஆதாரவொன்றும் கிடைக்கவில்லை. இன்னும் அவர் இறுதி நாளில் எந்நோய் உற்றுரென்றேனும், எங்கிருந்தார் என்றேனும் தெளிவாக அறிதற்குரிய சான்றுகள் அகப்படவில்லை. திருச்சிராப்பள்ளிக்குத் தென்மேற்கிலமைந்த மணப்பாறையை அடுத்த மயிலாடுபட்டியில் மேலைநாட்டுப் பாதிரிமார் மூவருடைய கல்லறை காணப்படுகின்றன. அம்மூன்றில் ஒரு கல்லறையில் 'பட்டணத்துத் தைரியநாத சுவாமி' என்று பொறிக்கப்பட்டுள்ளது. வீரமா முனிவர் தைரியநாதசுவாமி யென்று வழங்கப்பட்டமையாலும், பட்டணம் என்னும் சொல் திருச்சிராப்பள்ளியைக் குறித்தல் கூடுமாதலாலும் அப்பெயர்பொறித்த கல்லறை வீரமாமுனிவருடைய கல்லறையேஎன்று கருதுவார் ஒரு சாரார். தென்னுட்டு முத்துக்கரை மடத்தைச் சார்ந்த மணப்பாட்டில் முனிவர் தம் முதுமைப் பருவத்தில் சிலகாலம் அமர்ந்திருந்தாரென்னும் செய்தி கேட்கப்படுகின்றதேயன்றி மணப்பாறையினருகேயுள்ள மயிலாடுபட்டியில் அவர் எக்காலத்தும் இருந்ததாக இயேசு மட நிருபங்கள் கூருமையால் அவ்வூரில் முனிவர் கல்லறை கொண்டாரென்று கருதுதல் பொருந்தாது. பழுத்த முதுமையில் முனிவர் அம்பலக் காட்டில் அரும்பணி புரிந்தாரென்று தெளிவாகவிளங்குதலால் அவ்வூரிலேயே அவர்தம் தவ உடலை நீத்தாரென்று கருதுதல் தவருகாது.

முப்பதாம் வயதில் முனிவர் தமிழ் நாட்டிற்கு வந்தார்; தமிழின் இருவகை வழக்கும் இனிதறிந்து இலக்கணங்கள் இயற்றினுர்; பாட்டாலும் உரையாலும் இயேசு சமயத்தைப் பரப்பினுர்; தமிழகராதி தொகுத்துதவினுர்; முப்பத்தேழு ஆண்டுகள் தமிழ் நாட்டில் வாழ்ந்து அரும்பணி செய்தார். ஏலாக்குறிச்சியில் அவர் அமைத்த திருக்கோயில் இன்றும் நின்று நிலவுகின்றது.

———

# திருக்காவலூர்க் கோவில்

## 1. அடைக்கல மாதா

தமிழ்மொழியை முறையாகக் கற்றுணர்ந்த மேலைநாட்டு அறிஞர் பலராவர். அவர்களுள் பாட்டாலும் உரையாலும் அம்மொழியை அணி செய்தவர் சிலரே. அத்தகைய வித்தகருள் தலை சிறந்தவர் வீரமாமுனிவர். 'எத்திசையும் புகழ்மணக்க இனிதிருந்த' இத்தாலிய தேசத்திற் பிறந்த அம்முனிவர் முப்பத்தைந்து ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் இயேசு சமயத் தொண்டு புரிந்தார்.

> ''மறைமொழி வாயினன், மலிதவத் திறைவன்
> நிறைமொழித் தூவன் நிகரில் கேள்வியன்''

என்று கற்றறிந்தவரால் பாராட்டப்பெற்ற அம்முனிவர், தமிழகத்தில் நிறுவப்பெற்றிருந்த மதுரை மடத்தைச் சார்ந்து பல்லாண்டு பணிசெய்தவராதலால் அம்மடத்தின் வரலாற்றைச் சுருக்கமாக அறிந்துகொள்ளுதல் நன்றாகும்.

பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் மதுரைமா நகரில் வீரப்ப நாயகர் அரசுபுரிந்தார். இயேசுசமய அடிகளாய பர்னாந்தர் என்பார் அம்மன்னனிடம் மதுரையில் இயேசு சபை நிறுவ அனுமதி பெற்றார். பத்தாண்டுகளுக்கு மேலாகப் பர்னாந்தர் பலவாறு முயன்றும் பாண்டி நாட்டினர் எவரும் இயேசுசமயத்தை ஏற்றுக்கொள்ள இசைந்தாரல்லர். மேலைநாட்டுப் பாதிரிமார் அனைவரும் பறங்கியர் என்றும், பசுவின் ஊனைப் புசிப்பவர் என்றும், இழிந்த குலத்தாரோடு இணங்கி வாழ்பவர் என்றும் பாண்டிநாட்டார் கருதினமையால் பர்னாந்தர் முயற்சி பயன்படாதொழிந்தது.

அவர்க்குப் பின் மதுரையிற் பணியாற்றப் போந்த தத்துவ போதகர் என்னும் இத்தாலிய அடிகள் இயேசுநெறியை மதுரை மாந்தரின் ஆன்ற மதிப்பிற்கு உரியதாக்கக் கருதி அரும்பாடுபட்டார். பர்னாந்தர் கையாண்ட முறைகளில் அமைந்த குறைகளைக் கண்டு அவற்றை விலக்கினர். மேலைநாட்டுப் பறங்கியர்க்குரிய

ஊனும் உடையும் கொண்டு இயேசுசமய போதகர் மதுரையம்பதியில் வதியுமளவும் அவர் கொண்ட நோக்கம் நிறைவுறுதென்று கண்டார். மதுரையார் கருத்தைக் கவரும் வழிகளைத் துருவி யறிந்தார். ராபர்ட் நோபிலி என்னும் தம் இயற்பெயரை மாற்றித் தத்துவ போதகர் என்னும் புதுப்பெயர் பூண்டார். தமிழ் நாட்டுத் துறவோர் உடுக்கும் காவி உடையைத் தாமும் உடுத்தார். கள்ளும் ஊனும் கடிந்து, காய் கனிகளை அருந்தினர். காலையும் மாலையும், காவி போர்த்த ஆதனத்தமர்ந்து கண்மூடித் தியானத்தில் ஆழ்ந்தார். அவர் மார்பில் அணிந்திருந்த ஐம்புரிப் பொன்னூலில் அழகிய சிலுவை இலங்கிற்று. இங்ஙனம் அல்லும் பகலும் அருந்தவம்புரிந்த தத்துவபோதகர் பெருமை மதுரைமாநகர் முழுவதும் பரவியது. இடையறாது இறைவனை வழிபடும் 'ரோமாபுரி வேதியர்' ஒருவர் மதுரையம்பதியில் வந்துள்ளாரென்று கேள்வியுற்றார் பலர் அவரைக் காண விரும்பிச் சென்றார். தென்மொழியோடு வடமொழியும் தெலுங்கும் போதிய அளவு கற்றறிந்திருந்த தத்துவ போதகர், இயேசுசமயக் கொள்கைகளைக் கேட்டார் உள்ளங்கொள்ள எடுத்துரைப்பாராயினர். அந்தணர் மனைபோல் விளங்கிய இயேசு மடத்தின் செம்மையையும், இலங்குநூல் கற்ற தத்துவபோதகரது தவத்தின் மாண்பையும் அறிந்து மகிழ்ந்த மாந்தர் பலர் அவரை மதித்துப் போற்றத் தலைப்பட்டார். இவ்வாறு பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மதுரை மடத்திற்கு அடிப்படை கோலிய பெருமை தத்துவ போதகர்க்கே உரியதாகும்.

மதுரையம்பதியில் இயேசு சமயம் இங்ஙனம் பரவிவருங்கால் [1]சேது நாட்டிலும், அம்மதம் கால்கொள்ளலாயிற்று. அருளானந்தர் என்னும் தமிழ்ப் பெயர் பூண்ட போர்ச்சுகீசியப் பெரியார் அந்நாட்டில் பணியாற்றப் போந்தார். நுண்ணிய அறிவும் திண்ணிய சமயப் பற்றும் வாய்ந்த அவ்வடிகளின் சீலம் சேதுநாட்டு மாந்தர் மனத்தைக் கவர்ந்தது. அந்நாட்டு வீரக்குடியினரால் நன்கு மதிக்கப்பெற்ற தலைவருட் சிலர் அருளானந்தர் காட்டிய நெறியைக் கடைப்பிடித்து ஒழுகத்தலைப்பட்டனர். அக்காலத்தில் கிழவன் சேதுபதி யென்னும்

1. சேது நாடு—இராமநாதபுரம் ஜில்லா.

விசயரங்கநாதத்தேவர் சேதுநாட்டு மன்னராயிருந்தார். அருளானந்தர் செய்த போதனையால் தம் நாட்டில் இயேசுசமயம் பரவிவருதலையும், தம் உற்றார் உறவினருட் சிலர் அச்சமயத்தினை ஆதரித்துப் போற்றுதலையும் அறிந்து சீற்றமுற்ற சேதுபதி அவ்வடிகளைப் பிடித்துச் சிறைப்படுத்தினர். சிறையிலிருந்து துயருழந்த அடிகளின் சமயம் முன்னிலும் விரைந்து அந்நாட்டில் பரவலாயிற்று. அடிகளின் மனத்திட்பம் கண்டு வியப்புற்ற சேதுநாட்டுப் பழங்குடியினர் இயேசு நெறியினை ஏற்றுப் போற்றுவாராயினர். இவ்வாறு சிறையிருந்து மக்கள் மனத்தை ஈர்த்த புறச்சமய போதகர்மீது சேதுநாட்டு மன்னன் பொல்லாச் சீற்றங்கொண்டான். ஆயினும், தன் அகத்திலமைந்த கடுஞ் சினத்தைப் புறத்தே காட்டாது, அருளானந்தரைச் சிறையினின்றும் விடுவித்துப் பாம்பாற்றங்கரையிலமைந்த ஓரியூருக்கு அனுப்பினன். ஓரியூர்த் தலைவன் சேதுபதியின் உறவினன். அன்னன் சேது மன்னன் ஆணைப்படி ஓரியூர்க்கோட்டையின் மருங்கே அமைந்த பெரும் பறம்பில் அருளானந்தரது சிரத்தை அறுத்து அவர் திரு மேனியை விலங்குக்கும் பருந்துக்கும் விருந்தாக்கினன்.

ஓரியூரில் நிகழ்ந்த கொடுமையை அறிந்தவர் மனங் கொதித்தார்; தலைவன் இழைத்த தவறு காரணமாக நாட்டிற்கு என்ன தீங்கு நேருமோ என்றெண்ணிக் குடிகள் உலைவுற்றார். அருளானந்தர்க்குத் தவறிழைத்த ஓரியூர்த்தேவனும் அவன் அமைச்சனும், கொலை நிகழ்ந்த ஆண்டு கழியுமுன்னமே கொடும் பிணியுற்று இறந்துபட்டார். அந்நிலையில் சேதுபதியின் முதல்மைந்தன் ஓரியூர்க்கோட்டைக் காவலன் ஆயினன். தாம் மெய்யாக் கண்ட உண்மையைப் பரப்ப முயன்று பழுதுற்ற அருளானந்தரின் அருஞ்செயல் அவன் உள்ளத்தை உருக்கியது. அடிகளின் உடம்பினின்று பாய்ந்த குருதியாற் புனிதமுற்ற பறம்பிற் போந்து வழிபடக் கருதிய இயேசுசமய அடியார்க்கு அவன் பல வசதிகள்செய்து உதவினன். அருளானந்தர் உயிர் வழங்கிய இடத்தில் நிகழ்ந்த அற்புதங்களைக் கண்டும் கேட்டும் சேதுநாட்டு மாந்தர் பலர் இயேசுநெறியிற் சேர்ந்தார்கள். இங்ஙனம் அருளானந்தர் கண்ணீரும் செந்நீரும் வார்த்து வளர்த்த இயேசு நெறி சேதுநாட்டில் சிறந்தோங்கி வளரத்தொடங்கிற்று.

தமிழகத்தின் களஞ்சியம் எனப் புகழ்பெற்ற தஞ்சை நாட்டை அந்நாளில் மராட்டிய மன்னர் ஆண்டுவந்தனர். காவிரி நாட்டில் சமயத்தொண்டு செய்த இயேசுசமயத் திருச்சபையார் அம் மன்னர் சீற்றத்திற்கு ஆளாயினர். சாஜி என்னும் மராட்டிய மன்னன் தஞ்சையிற் பணிசெய்த இயேசு அடியாரைச் சிறைக்கோட்டத்திலடைத்துத் துன்புறுத்தினன். இயேசு சமயத்தொண்டர்க்குத் தவறிழைத்த சாஜிமன்னனைத் "தஞ்சைநகர்[2]நீரோ" என்று கிறிஸ்தவ நிருபமொன்று குறிப்பிடுகின்றது. சாஜியரசனுக்குப் பின் தஞ்சையை ஆளத்தலைப்பட்ட சரபோஜி மன்னன் தொடக்கத்தில் சமயப்பொறையுடையவன் போற் காணப்படினும் நாளடைவில் தன் கொடுமையால் முன்னவனை நல்லவனுக்கினன்.

கிறிஸ்தவசமயத் திருச்சபையை வேரறுப்பதாகத் தஞ்சை மன்னர் வஞ்சினம் பூண்டமையால் அவர்தம் ஆட்சிக்குட்பட்ட நாட்டின் எல்லையாயமைந்த கொள்ளிட நதியின் வடகரையில் திருக்கோயில் அமைத்து இயேசு அடியார் சமயப்பணி செய்ய விரும்பினர். மதுரையில் அரசுபுரிந்த நாயக மன்னர்க்குத் திறை செலுத்திய அரியலூர் மழவராயரது ஆளுகையில் அமைந்த ஏலாக்குறிச்சி என்னும் சிற்றூரில் இயேசு சமயத்தினர் திருச்சபை நிறுவித் தொண்டுபுரியத் தொடங்கினர். அக்குறுநில மன்னன் ஏலாக்குறிச்சித் திருக்காவலூரில் இயேசு சமயத்தார் திருக்கோயில் எடுத்து இடையூறின்றி வழிபடும்பொருட்டு நான்கெல்லை குறித்த ஓரிடத்தை நன்கொடையாக வழங்கி அதனைச் சாசனவாயிலாக உறுதிசெய்தான்.*

2. நீரோ என்பவன், ரோமாபுரியில் ஆட்சி புரிந்த கொடுங்கோல் மன்னன்.

* அச்சாசனமாவது:—ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் ஆயிரத்து அறுநூற்று ஐம்பத்தேழு இராக்ஷதவருஷம் ஆடிமாதம் 26-ம் தேதி (5-8-1734) ஸ்ரீ மது ராஜமான்ய ராஜ ஸ்ரீ அரியலூர் அரசினிலையிட்ட ரங்கப்ப மழவராயர், ஏலாக்குறிச்சித் திருக்காவலூரில் வீரானதேவன் வழிக்குக் கிழக்கு, கோவிலூர் வழிக்கு மேற்கு, குட்டைக்குத் தெற்கு, பெரிய ஏரிக்கு வடக்கு, இதற்குட்பட்ட யாவும் சர்வேஸ்வரன் கோவிலுக்குச் சிலாசாதனமாகத் தந்தோம். சந்திராதித்தரும், கல்லும், காவிரியும்,

மழவராயர் வழங்கிய இடத்தில் எளியதோர் கிறிஸ்தவசமயக் கோவில் எழுந்தது. தஞ்சை மன்னரது வன்கண்மைக்கு ஆற்றாது மனந் தளர்ந்த கிறிஸ்தவர்க்குக் காவலூர்க்கோவிலும் சபையுமே தாரக மாய் அமைந்தன. கொள்ளிட நதியில் வெள்ளமற்ற நாட்களில் தஞ்சைக் கிறிஸ்தவர் அவ்வாற்றைக் கடந்து போந்து காவலூர் மடத்திலமைந்த சமயபோதகரிடம் அறவுரை கேட்டு மீள்வாராயி னர்.

இங்ஙனம் தோன்றிய ஏலாக்குறிச்சி நிலையத்திற் பணியாற்றிய இயேசு சமய அடிகளுள் தலைசிறந்தவர் வீரமாமுனிவராவர். அம் முனிவர், மராட்டிய மன்னரது புறப்பகையாலும், தரங்கம்பாடித் [3]தேனிய சபையாரது அகப்பகையாலும், இயேசுசமயத் தொண்டு மாசுறுதலை அறிந்து மனம் வருந்தினர். அக்காலத்தில் தென்னாட்டில் கொடும் பஞ்சம் வந்துற்றது. தஞ்சைமா நகரில் பிழைக்கவந்த தென்னாட்டு மக்களிற் பெருந்தொகையினர் உண்ண எவ்வகை உணவு மின்றி வீதிகளில் மயங்கி வீழ்ந்து மாண்டனர். சாலைகளிலும், சோலைகளிலும், நிலங்களிலும், புலங்களிலும் இறந்துபட்ட மாந்தர் எண்ணிறந்தவர். மாதேவிப்பட்டணம் என்னும் ஊரில் இறந்தவரைத் தனித்தனி எடுத்து அடக்கம் செய்ய இயலாது பார வண்டிகளில் அடுக்கிச் சென்று ஊர்ப்புறத்தே அகழ்ந்த பொதுக்குழிகளிற் புதைத் தனர். சேதுநாட்டினின்றும் போந்த மாந்தர் சிலர் தம் பிள்ளைகளை விற்று வயிறு வளர்ப்பாராயினர்.

இங்ஙனம் பசியென்னும் தீப்பிணியால் நலிவுற்ற ஏழை மாந் தர்க்குத் தரங்கம்பாடித் தேனிய சபையார் உண்ண உணவளித்து ஒல்லும் வகையால் ஆதரித்தார்கள். 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' எனக் கருதிய ஏழைமாந்தர் அச்சபையின் உபதேசியர் செவ்விபார்த்துச் செய்த சமய போதனையைச் செவியி

---

புல்லும், பூமியுமுள்ளளவும் சுகமே இருக்கவும். இந்தத் தருமத்துக்கு யாதாம் ஒருத்தன் விகாதம் செய்தால் கங்கைக் கரையிலே காராம் பசு வைக் கொன்ற தோஷத்திற் போகக்கடவன்.

3. தேனிய சபை—The Danish Mission.

லேற்று அவர் பணித்தவாறொழுகத் தலைப்பட்டார். பஞ்சத்தின் கொடுமையைத் தீர்த்தற்பொருட்டும், இயேசு சமயத்தினரைத் தேனிய சபையார் வசப்படாமற் காத்தற்பொருட்டும், வீரமாமுனிவர் திருக் காவலூரில் புதியதோர் வழிபாடு இயற்ற விரும்பினார். சென்னையைச் சார்ந்த மயிலாப்பூரில் வீற்றிருந்த மேற்றிராணியார் ஆணைபெற்று வீரமா முனிவர் மரியம்மாளின் திருவுருவைக் காவலூரில் அழகுற நிறுவினார். அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருந்துணையாக நின்று அரந்தை கெடுத்து வரந்தரும் திறம்வாய்ந்த அவ்வன்னையை 'அடைக்கல மாதா' என்று அழைத்தார். அம்மாதாவின் அடிகளில் நறுந் தமிழ்ப் பாமாலை அணிந்து மகிழ்ந்தார்.

புலவர் நாவிற் பொருந்திய பொன்னியாற்றின் வடகரையில், நறுமணங் கமழும் பூஞ்சோலையின் நடுவே அமைந்த அழகிய கோவிலில், மின்னார் முடி புனைந்து, கதிரொளி திகழும் கலையுடுத்து, அங்கையில் மணிவடந் தாங்கி, கருணை பொழியும் கண்களோடு வட திசையை நோக்கி நின்ற அடைக்கல மாதாவின் அருட்கோலத்தினை,

"கனைபூத்த சோணாட்டுக் காவிரியின் வடகரைமேல்
சினைபூத்த நிழற்பொழில்வாய் சிங்கநெடுங் கொடிநிழற்றும்
திருக்காவ லூரகத்துத் திகழொளிவாய் மணிக்கோயில்
அருட்காவ லியற்றிநமை அளிப்பதுநின் தயையாமோ

உள்ளுருவாக் கவசமென உத்தரியத் துடன்மருள்தீர்
தெள்ளுருவா மணிமாலை சிறந்தேந்தும் கைந்நீட்டி
வாய்பொய்யா மறைத்திசையாம் வடதிசையே தனைநோக்கித்
தாய்பொய்யா அடைக்கலமே தருவதுநின் புகழாமோ"

என்று வீரமா முனிவர் ஆர்வமுறப் பாடியருளினார். அன்பினால் அகங் குழைந்து தொழுதேத்தும் அடியார்க்கு இறைவன் இரங்கி அருள் புரியும் கொள்கையை அடைக்கல மாதாவின் திருக்கரத்திலமைந்த மணிமாலை தெளிவுறக் காட்டுவதாயிற்று. அம்மணிமாலையைக் கண்டு இன்புற்ற அடியார்கள் "மண்ணவரை மேலேற்ற விண்ணவர் விடுத்த மணிவடமோ! அல்லல் விளைக்கும் வல்வினையை அறுத் தொழிக்கும் அரும்படையோ! ஆதரித்தழைக்கும் அடியவரை அரு

ளாற் பிணிக்கும் அருந்தளேயோ'' என்று அதனை வியந்து போற்று வாராயினர்.

இவ்வாறு அருட்கோலம் கொண்டு எழுந்தருளிய அடைக்கல மாதா கண்ணினைக் காக்கும் இமைபோல் திருக்காவலூரைக் காத்து வந்தாள். ஒருநாள் அவ்வூரின் ஒருசாரமைந்த ஓலை வீடுகளில் தீப்பற்றிக்கொண்டது. அப்பொழுது ஆண்டு வீசிய நெடுங்காற்று அச் சிறுநெருப்பைப் பெருநெருப்பாய் வளர்த்தது. காற்றினால் ஊற்றமுற் றெழுந்த கொடுங்கனல் எங்கும் பொறி வீசி ஏழையர் வீடுகளை எரிக்கத் தொடங்கிற்று. காற்றும் கனலும் கலந்து கேடிழைக்கக் கண்ட அவ்வூர்க் கிறிஸ்தவர்கள் செய்வதொன்றறியாது, அற்றார்க்கு அபயமளிக்கும் அடைக்கல மாதாவைத் தொழுது பாடினார்கள்.

''மதியெழுந்த பாதமே மதிகடந்த நீதமே
மருள்மறந்த நீதமே அருள்சிறந்த சீதமே
நதிவழங்கு காவலூர்ப் பதிவழங்கு காவலே
நன்னையாக முன்னையாள் என்னையாளு மன்னையே''

என்று தொண்டரனைவரும் சேர்ந்து அழுது இசைத்த தொழு குரல் நாற்றிசையும் பரந்தொலித்தது. அங்கிலையில் கண்டோர் வியப்புறக் காற்றின் வேகம் குறைந்தது. கனலின் வெம்மையும் தணிந்தது. அடைக்கல மாதாவை நம்பித் தொழுத அடியவர் குடிசைகள் நெருப் பிற் கிரையாகாமல் நின்றன. அப் புதுமையைக் கண்ட புறமதத்தி னரும் காவலூர் அன்னையின் பெருமை யறிந்து காணிக்கை செலுத் தத் தொடங்கினர்.

இவ்வாறாகக் கொள்ளிட நதியின் இருகரையிலும் அமைந்த ஊர்களில் அடைக்கலமாதா வழிபாடு பரவிவருங்கால் ஒருநாள் காவ லூர்க் கோவிலைச் சார்ந்த நந்தனவனத்தில் ஒரு பசு நுழைந்து ஆங் கமைந்த பூஞ்செடிகளையும் கொடிகளையும் மிதித்துச் சிதைத்து அழித் தது. பூஞ்சோலைக் காவலாளன் பசுவின் செயல் கண்டு ஆற்றாது பெருங் கழியால் அதனை நையப் புடைத்தான். அடியுண்ட பசு அருகே யிருந்த அடவியில் ஓடி விழுந்து உயிர் துறந்தது. காட்டில் இறந்து கிடந்த பசுவினைக் கண்டு பதைத்தெழுந்த இந்து சமயத்தார் பழிக்கும்

பழி வாங்க முனைந்து நின்றார். 'காவலூர்க்கோவில் வேதியனே பசுக் கொலைபுரிந்த பாதகன்' என்று எங்கும் பறை சாற்றினர். முன்னாளில் கன்றை இழந்து அலறிய ஒரு பசுவின் துயர்கண்டு தரியாது அருமருந்தனைய அரசிளங்குமரனை முறைசெய்து அறநெறியை ஆதரித்த வளவன் ஆண்ட சோழநாட்டில் இவ்வன்கொடுமை நேர்ந்ததே என்று ஏங்கினர். அப்பொழுது அரியலூர்க் குறுநிலமன்னன் அவ்வழியாகக் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். காவலனைக் கண்ட ஊரார் கதித்தெழுந்து அவன் அடிகளில் வீழ்ந்து நிகழ்ந்த தீமையை முறையிட்டார்; பசுக்கொலை புரியும் பாதகரை நாட்டினின்று ஓட்டிவிடல்வேண்டுமென்று மன்னனை நயந்து வேண்டினர்; அடியுண்டிறந்த பசுவினை அடவியினின்றும் எடுத்துவந்து அவன் முன்னே இட்டார். பசுவின் நிலைகண்ட காவலன் மனம் பதைத்தான். ஆயினும், காவலூர்க்கோவில் வேதியனே அதனைக் கொலைபுரிந்தானென்று துணிதற்குரிய சான்று ஒன்றும் அகப்படாமையால், ஊரார் சீற்றத்தை ஒருவாறு ஆற்றிச் சென்றான். காவலூர் மாந்தர் சீற்றத்தால் என்ன நேருமோ என்று அஞ்சியிருந்த திருச்சபைத் தொண்டர்கள் மலையென வந்த இடரைப் பனியெனத் துடைத்த மாதாவின் அருள்நினைந்து மனமாரத் தொழுதார்கள்.

காவலூரிற் கோவில்கொண்டருளிய அடைக்கலமாதாவின் பெருமை நாற்றிசையும் பரவிவருதலை அறிந்த தரங்கம்பாடித் தேனியசபையார் உருவ வழிபாட்டுக் கொள்கையை மறுத்துப் பொது மக்கள் மனத்தில் பெருங்குழப்பத்தை விளைக்கத் தலைப்பட்டார்கள்; "கிறிஸ்தவர்கள் தேவமாதாவின் உருவத்தையும், இயேசுநாதர் வடிவத்தையும், சிலுவையாதிய சின்னங்களையும் வணங்குதல் அஞ்ஞானம்" என்றார்கள். இவ்வாறு தொன்மைசான்ற திருச்சபையின் கொள்கையை மறுத்துரைத்த தேனிய சபையார்க்கு வீரமாமுனிவர் 'வேதவிளக்கம்' என்னும் நூலின் வாயிலாக மாற்றம் உரைத்தார். "உருவங்களைச் செய்து வணங்கும்படிக்குத் திருச்சபையில் வழங்கின முறையின் நியாயம் (என்னை) யெனில், செய்த உருவங்களைக் கண்டு அவ்வுருவங்கள் அடையாளமாகக் காட்டுகிற சேசுநாதரும், தேவமாதாவும், மற்ற மோட்சவாசிகளும் நன்னெறி வழுவாமல் செய்த

தருமங்களை நினைத்து, நாமும் ஒத்த நெறியில் போகத் துணிவதற்கு உபாயமாக வழங்கின முறையாகும். உருவங்கள் எழுத்து வாசனை அறியாதவரும் வாசிக்கத் தகும் ஒரு புஸ்தகமாமே. (உலகிலுள்ள மக்களுக்காகப்) பாடுபட்ட கர்த்தர் சுரூபத்தைக் கண்டவளவில், பரலோகத்தையும் பூலோகத்தையும் உறவாக்கிய சுவாமி, எம்மேலிரங்கி மனிதனாய்ப் பிறந்து, எளியனாய்த் திரிந்து, நம்மாலாற்றாத கொடூர பாவ வினைகளைத் தீர்க்க அவற்றைத் தம்மேற் போட்டுக்கொண்டு, பரமகதி மோட்ச வாயிலைத் திறந்து, நாம் அங்கே என்றென்றைக்கும் வாழும்பொருட்டுத் தாம் அடிபட்டு, நிந்தைப்பட்டு, முள்முடி சூட்டி, தாமே சுமந்த நெடுஞ் சிலுவையின்மேல் பெரிய இருப்பாணிகளால் அறையுண்டு, இரத்தமும் சிந்தி, உயிரும் தந்து, கொடிய மரணத்தை மனம் பொருந்தி அடைந்தாரென்று ஒரு பார்வையாகக் கண்டறிந்து நாம் மனம் நொந்து உருகவும், அவர்மேல் இரங்கி வருந்தவும், பாவங்களை ஒழித்து வெறுக்கவும், திறந்த மோட்ச ராஜ்யத்தில் செல்லத் துணியவும், உறுதியாகுமல்லவோ? அவ்வண்ணமே, தேவமாதாவையும் மற்ற மோட்சவாசிகளையும் குறித்து அடையாளமாக வைத்த பல சுரூபங்களைக் கண்ட அளவில், அவர்கள் கொண்ட பொறுமையால் நமது கோபம் மாறவும், அவர்கள் காட்டிய தாழ்ச்சியால் நமது அகங்காரம் தணியவும், அவர்கள் முடித்த தவத்தால் நமது காமம் ஒழியவும், அவர்கள் நடந்த அறத்தின் ஒழுக்கத்தால் நமது பாவம் தவிர்ந்துபோகவும் உதவுமல்லவோ? அர்ச். யுவான் குவால் பேர்த்து என்பவர் தன் தம்பியைக் கொன்ற பகையாளியைத் தனியே கண்டு அவனைக் கொல்லக் கையை ஓங்கிய அளவில் அவன் விரித்த கையாற் காட்டிய சிலுவையின் அடையாளங் கண்டு தம் பாவத்தைப் பொறுக்கச் சேசுநாதர் சிலுவையில் அறையுண்டு இறந்ததை நினைத்துத் தாமும் பகையைவிட்டுப் பகைவனைத் தம்பியாகக் கட்டிக்கொண்டார். அதன்பின்பு கோயிலினுட் புகுந்து பாடு பட்ட கர்த்தர் சுரூபத்தைத் தெண்டனாக வணங்கும்போது, 'நீ நமக்குப் பிரியமாக நன்றாய்ச் செய்தாய்' என்றாற்போல சேசுநாதர் சுரூபம் தலைகுனிந்து தம்மை இன்பமாக நோக்கக்கண்டார். கண்ட மாத்திரத்தில் உள்ளமுருகி வேறாகி, உலக செல்வங்களை வெறுத்

துச் சன்னியாசம் பண்ணி அர்ச்சிய சிஷ்டரானுர்". ஆதலால், உருவ வழிபாடு வேண்டற்பாலதேயாகும் என்று வீரமா முனிவர் விரித்துரைத்தார்.

திருக்காவலூரில் வீரமா முனிவர் எடுத்த அடைக்கலமாதா வழிபாட்டை இகழ்ந்துரைத்த தேனிய சபையார், தஞ்சையில் அரசு புரிந்த மராட்டிய மன்னரின் ஆதரவுபெறுதற்குப் பெரிதும் முயன்ருர்கள். அம்மன்னரது அன்பினைப் பெறுதற்குரிய வாய்ப்பும் காலத்திற் கிடைத்தது. சரபோஜி மன்னன் மேனியில் பெரும் பிளவையொன்று புறப்பட்டது. அப்பிணியின் கொடுமைக்காற்ருது நெடுநாள் மன்னன் நலிவுற்ருன். அரண்மனை மருத்துவரனை வரும் அரசனைக் கைவிட்டார். அங்கிலேயில் தென்மார்க்கு தேசத்தில் சிறந்த மருத்துவராய்த் திகழ்ந்த காசிபரை வருவித்துப் பார்த்தால் நோய் தீர்ந்தொழியுமென்று தேனிய சபையார் அம் மன்னனிடம் தெரிவித்தார்கள். அவனும் அக்கருத்தை ஆதரித்தேற்று விரைவில் அம் மருத்துவரை வரவழைக்கப் பணித்தான். அப்பணி தலைமேற்கொண்ட தேனிய சபையார் தென்மார்க்கு மன்னனுக்குத் திருமுகம்விடுத்தார். அம்மன்னன் காசிபர் என்னும் பெயர்பெற்ற மருத்துவ நிபுணரை உடனே அனுப்புவித்தான். காசிபர் தரங்கம்பாடித்துறையில் வந்தடைந்தாரென்று கேள்வியுற்ற தஞ்சைமன்னன் அவரைத் தக்க சிறப்புடன் அழைத்துவருமாறு தன் பரிவாரங்களை அனுப்பினுன். அரச விருதுகளோடு அழகிய பரிகளும் கரிகளும் எழுந்துவரக் கண்ட தேனிய சபையார் மனம் தழைத்தார். காவலூர்த் திருச்சபையைச் சேர்ந்தோர் மனம் வாடி வருந்தினர். முன்னரே இயேசுசமயத் தொண்டரை முற்றும் வெறுத்த தஞ்சைமன்னன் தேனியசபையின் சார்பாக வந்த மருத்துவருதவியால் பிணிதீர்ந்து எழுந்தபின்பு திருச்சபைக்கு என்ன தீங்குகள் செய்வானே என்று ஏங்கி மயங்கினர். எனினும் "ஒன்றைநினைக்கின் அதுவொழிந்திட் டொன்ருகும்" என்னும் முதுமொழிக் கிணங்க காசிபர் தரங்கம்பாடியினின்று தஞ்சைக்குப் புறப்படக் குறித்திருந்த நாளில் பிணிவாய்ப்பட்டுப் படுத்தார். மறுநாள் உயிர்விடுத்தார். தேனிய சபையார் அருமணிஇழந்த நாகம்போல்

ஆறாத் துயருற்றார். மராட்டிய மன்னனது ஆதரவைப் பெறுவதற்குப் பட்ட பாடெல்லாம் பாழாயிற்றென்று மனம் பதைத்தார். கவலை தீர்ந்த காவலூர்த் திருச்சபையார் 'கண்ணிணைக் காக்கின்ற இமை'யிற் காக்கும் காவலூர் அன்னையின் கருணையை நினைந்து மனமார வாழ்த்தினர்.

காவலூர் மாதாவின் அருளால் கவலைநீங்கிய அடியார்கள் நாள் தோறும் நறுமலரும் தூபமும் சாந்தமும் கொண்டு அம்மாதாவைப் போற்றினர்கள். அடைக்கலமாதா எழுந்தருளியிருந்த பூஞ்சோலை கருதிய நலமெலாம் கனிந்தளிக்கும் கற்பகச் சோலையாக விளங்கிற்று. நல்லருள் தளிர்ப்ப, ஞானநிழல் குளிர்ப்ப, வரம் அரும்ப, சீர் கனிய நின்ற அச்செழும் பொழிலின் செம்மையை,

"நானுதயை தளிர்ப்ப ஞானநிழல் குளிர்ப்பத்
தேனூர் வரமரும்பச் சீர்கனிய—வானும்
அஞ்சலிசெய் உன்தாள் அருட்காவல் நாயகியே
எஞ்சிலதோர் சோலை எனக்கு"

என்று வீரமாமுனிவர் வியந்து பாடினர். காவலூர்ப் பூஞ்சோலையில் விரிந்த நறுமலர்களில் அமர்ந்து தேனுண்டு பண்ணார்ந்த பாட்டிசைத்த வண்டுகளைக் கண்டு மகிழ்ந்த முனிவர் தாமும் அடைக்கலமாதாவின் கண்ணியில் வண்டாக ஊர்ந்து அன்னையின் கருணைத் தேன் பருகித் தண்டமிழ்ப் பாட்டிசைக்கும் பேறுபெற விரும்பினர். புரைதீர்ந்த காவலூர்ப் பூம்பொழிலிற் புல்லாய்க் கிடந்து, மெய்யடியார் திருவடிப் பரிசம் பெற்றுப் பண்புற விரும்பினர்.

"தாளணிந்த மதிமுதலாத் தமியனுமக்
கமலத்தாள் தாங்கி லேனே
கோளணிந்த குழலணிதார் குடைவண்டாப்
புகழ்பாடி மதுவுண் ணேனே
வாளணிந்த வினைப்படைவேல் வலிச்சிங்கம்
ஈன்றவொரு மானாய் வந்தாள்
கேளணிந்த காவனலூர்க் கிளர்புனத்துப்
பசும்புல்லாக் கிடவேன் நானே"

என்று குழைந்துபாடும் முனிவரது ஆர்வம் அன்பர் மனத்தை அள்ளுவதாகும். இங்ஙனம் பெருந்தகையாளர்க்குப் பேரின்ப ஊற்றாய்த் திகழ்ந்த காவலூர் அன்னை, பாவத்தீயினை ஆற்றுவாள் என்றும், மறை நூலினைத் தேற்றுவாள் என்றும், உயிர் நோயினை மாற்றுவாள் என்றும் முனிவர் போற்றி உரைத்தார்.

இத்தகைய அடைக்கல மாதாவை வழிபடப் போந்த அடியார்கள் அவ்வன்னையின் கருணையைப் பாட்டாலும் உரையாலும் பரவிப் போற்றுவாராயினர்.

"இன்பருளிப் பூநிழல்சூழ் இயைகாவ லூரகத்தே
அன்பருளி நீயெனையும் அடைக்கலங்கோண் டாயிலையோ

என்று தனித்தனி அரற்றி நின்றார் சிலர்.

மந்திரமும் ஓதலிலேன் வாடியஎன் உயிருய்யும்
தந்திரமும் மற்றுமிலேன் தருங்கதிசேர் தடமறிந்தேன்

என்று கழிவிரக்கங்கொண்டு கதறினர் சிலர்.

வாடியஎன் உயிருவப்ப வானமிர்தம் ஊட்டினையே
நாடியஎன் ஆசையற நலங்காட்டி அளித்தனையே''

என்று உள்ளுருகிப் பாடி நின்றார் சிலர். இவ்வாறு அகங்குழைந்து அன்பர்கள் பாடிய பாடல்களை நாள்தோறும் கேட்டிருந்த சோலைக் கிளிகள் தாமும் அம்மொழிகளை மிழற்றி மகிழ்ந்தன. செவ்வாய்ச் சிறு கிளிகள் பசுந் தழைகளினிடையே மறைந்து நின்று 'காவலூர்த் தாயே காத்தருள்வாயே' என்றும், 'கன்னித் தாயே கருணை செய்வாயே' என்றும் பவழவாய் திறந்து பேசும்பொழுது காவலூர்ச் சோலையில் வைகும் அடியார்கள் ஐந்து பேறிவும் செவிகளை கொள்ள ஆனந்த பரவசமடைந்திருப்பர். கல்நெஞ்சையும் உருக்கும் காவலூர்த்தாயின் கருணையாலும், மறத்துறை நீங்கிய மாதவர் அருளாலும் காவலூர்ச் சோலையில் வாழ்ந்த உயிர்களெல்லாம் பிணக்கம் நீத்து இணக்கமுற்று வாழ்ந்தன. அச்சோலையில் மகிழ்ந்து நடமாடும் அன்னங்கள் மெல்லியல் அடியார் நடைகண்டு உள்ளழிந்து ஒதுங்கி ஓடுவதில்லை. கீதம் பாடும் குயில்கள் அடியார்கள்

பண்ணெடு பாடும் பாட்டொலி கேட்டுப் பறந்தோடுவதில்லை. மரக் கொம்பினின்றுதிர்ந்த கனிகளை வீசியெறிந்து விளையாடும் அணிற் பிள்ளைகள் வேட்டைநாய்களின் நாட்டங்கண்டு வெருண்டு மரங்களில் ஏறி மறைவதில்லை.

இவ்வாறு இன்னுயிர்கள் அச்சமின்றி உயிர்வாழ்ந்த அச்சோலையில் ஒருநாள், வேற்றூர்ப் பருந்தொன்று விரைந்து புகுந்து ஒரு பசுங்கிளியைக்காலினாற் கவர்ந்தெடுத்துப் பறந்தது. அறநெறி துறந்த ஆடற் பருந்தின் வசப்பட்டுப் பதறிய அஞ்சொற்கிள்ளை நடுங்கிய குரலால் அன்னை மரியம்மையே உன்னடைக்கலம்' என்று ஓலமிட்டது. அந்நிலையில் மறத்துறை மேவிய பருந்து, தன் சிறகின் இயக்கமிழந்து காற்றேய்ந்த நிலையில் தலைகவிழ்ந்து வீழும் காற்றாடிபோன்று தரையிடை மயங்கி வீழ்ந்தது. அப்பொழுது அதன் கால்களில் அகப்பட்டிருந்த பசுங்கிளி விடுபட்டு, நடுக்கந் தீர்ந்து பறந்து எழுந்தோடி மரியம்மையின் திருவடியிலமர்ந்து, 'இன்னுயிர் காத்த அன்னாய் போற்றி', 'பருந்தினை மடக்கிய பாவாய் போற்றி' 'அபயமளித்த அருந்தாய் போற்றி', 'அடைக்கல மளித்த அணங்கே போற்றி' என்று ஞானத்தால் நன்மொழி பகர்ந்தது.

"பதியுகிர்வேம் பருந்தெடுப்பப் பசுங்கிள்ளை பதைத்தழைப்ப
வதியருள்கோன் டுதவியதே வனமாளும் திருக்காவல்
துதியருளோன் துயில்பாடத் துணையாடு மயிலல்லால்
மதிமருள்மற் றெருமதங்கி மருவாதிங் கெழந்தகையே"

என்று அப்புதுமையை வீரமா முனிவர் புகழ்ந்து போற்றினர்.

நீர்வளம் பொருந்திய காவலூர்ப்பதியில் ஒரு காணி நிலம் நெடுங்காலமாக எருக்கும் குருக்கும் முளைத்துப் பாழ் நிலமாய்க் கிடந்தது. அதனைச் சுற்றியிருந்த வயல்கள், பசும்பயிரின் முகங் காட்டி இருபூவும் தவறாது செந்நெல் விளைத்தன. பாழாய்க் கிடந்த நிலத்தை அணுகவும் அஞ்சினர் உழவர். அந்நிலம் கடுஞ்சினமுற்ற ஒரு கூளியின் ஆளுகையில் அமைந்திருந்ததென்றும், அக்காணியில், ஏர் பூட்டியுழுவோர் அப்பேயின் சீற்றத்திற்கு ஆளாவரென்றும், ஊரார் எண்ணியிருந்தனர். ஆயினும் மனத்திண்மை வாய்ந்த உழவன்

ஒருவன் அப்பேய்க் காணியிற் பயிர் செய்யத் துணிந்து, அதன்கண் அடர்ந்து வளர்ந்திருந்த செடிகொடிகளைக் களைந்தெறிந்து நாளேர் பூட்டி உழுதான். அவன் துணிவினைக் கண்ட காவலூர்ப் பொது மக்கள், ஒருவன் செய்யும் தவறு காரணமாக ஊரார்க்கு என்ன தீமை நேருமோ என்று ஏங்கி நடுங்கி நின்றார். அஞ்சா நெஞ்சினனாய உழவன் பலநாள் மெய் வருந்தி உழைத்து,

"உழுத உழவைக் கண்டு களித்தான்—பள்ளர்
உள்ளபேரை யெல்லாம் விளித்தான்
தொழுது தெய்வக் கடன் கழித்தான்—அந்தத்
தொளியில் விதையை யெல்லாம் தெளித்தான்".

நாற்றுமுடி இருந்தித் தழைத்தோங்கி வளரக்கண்டு உழவன் மனந் தழைத்தான். அக்கம் பக்கங்களிலிருந்த நெற் பயிர்களினும் பேய்க் காணிப்பயிர் செழிப்புற்றிருக்கக் கண்டு ஊரார் ஐயமுற்றார். 'அஞ்சினவர்க்கே வெஞ்சினப்பேய்' என்றறைந்தான் ஒருவன். 'அஞ்சாதார்க்குச் சஞ்சலமில்லை' என்று பல்லவி பாடினான் மற்றொருவன். 'வினையை விதைத்தவன் வினையை அறுப்பான்' என்று விளம்பினான் ஒரு கிழவன். "காவலூரில் ஒன்றவந்த மாதா ஊர்ப் பேயை ஓட்டிற்றோ" என்று வினவினான் ஒருவன். இவ்வாறு பலர் பலவாறாக எண்ணியும் பேசியும் வருகையில் அறுவடைக் காலம் வந்தடைந்தது. நல்ல நாளும் பொழுதும் பார்த்து, பேய்க்காணிப் பயிருக்குரியவனாய உழவன் நாட்கதிர் கொண்டான். அக்கதிரில் உருவி எடுத்த சில நெல்லைத் தன் மனையாளிடம் கொடுத்துச் சோறுசமைக்கச் சொல்லினான். கணவன் பாடுபட்டுத் தேடிய புதுநெல்லின் அரிசியைத் தன் அகத்தில் நிறைந்திருந்த அன்பொடு கலந்து அம்மாது நல்விருந்தாக்கியிட்டாள். அமுதுண்டு மகிழ்ந்த உழவன் வெளித் திண்ணையிற் சாய்ந்து கண்ணயர்ந்து உறங்கினான். கணவன் மனமார உண்டு சென்ற பின்பு எஞ்சிய உணவை அருந்திப் பரிகலம் திருத்திப் பாடு பார்த்திருந்த மனையாளும் மாலைப் பொழுதில் மயக்கமுற்றுக் குடிசையினுள்ளே படுத்தாள். அன்று அறுத்து வந்த கதிர்களின் தாள்களைப் பழைய வைக்கோலுடன் கலந்து தின்ற காளைகளும் தொழுவத்திற் படுத்தன. கதிரவன் மறைந்தான். காவலூர்

மனைதோறும் மாதர் மணிவிளக்கேற்றிப் பூவும் பொறியும் தூவித் தெய்வம் தொழுதார்கள். நாட்கதிர் கொண்ட உழவன் மனையைக் காரிருள் சூழ்ந்து நின்றது. என்றும் கலகலப்பாய் விளங்கும் அம்மனை அன்று பொழுதடைந்து நெடுநேரமாகியும், ஒளியும் ஒலியுமின்றி அமைதியுற்றிருக்கக் கண்ட அயல்வீட்டார் கைவிளக்குகளை எடுத்து வந்தார். வெளித் திண்ணையிலும் வீட்டினுள்ளும், அசைவின்றிக் கிடந்த உழவனையும் அவன் மனைவியையும் விளக்கொளியில் உற்று நோக்கினார். இருவர் முகங்களிலும் மரணக்குறிகண்டு அலறி அழுதார். உழவனும் அவன் மனைவியும் இறந்தாரென்னும் செய்தி காவலூர் முற்றும் விரைவிற் பரவியது. ஊரார் திரண்டு போந்துவீடு முற்றும் சுற்றிப் பார்க்கையில் உழவனுக்குரிய காளைகளும் கால் பரப்பி இறந்து கிடக்கக்கண்டார்கள். பேய்க்காணியைப் பயிரிட்டதனாலேயே உழவன் குடும்பமடங்கலும் இறந்துபட்டதென்று ஊரார் இரக்கமும் அச்சமும் எய்தினார். இந்நிகழ்ச்சிக்குப் பின்பு பேய்க்காணியைக் குறித்துப் பேசவும் அஞ்சினர் அவ்வூரார். பேய்க்காணியில் விளைந்த நெல் அறுப்பாரின்றி உதிர்ந்தழிந்தது. அன்றுமுதல் அக்காணியின் அருகே செல்வாரும் இலராயினர்.

இவ்வாறிருக்கையில், காவலூர் அடைக்கல மாதாவின் அடித்தொண்டராய அன்பர் சிலர், குறும்பிழைக்கும் கூளியை ஒறுக்கும் திறம் வாய்ந்த அன்னையின் அருட்டுணை கொண்டு அவள் பெயரால் அப்பேய்க் காணியை உழுது பண்படுத்தத் துணிந்தார்கள். கிறிஸ்தவர் அல்லாதவர்கள் மறைவாகத் தமக்குள்ளே பல பேசி முன் உயிரிழந்த உழவன் கதியே இவர்க்கும் நேருமென்று உறுதிகொண்டிருந்தார்கள். பருவத்தில் மரமடித்து இயேசுசமயத்தை நேசித்த பள்ளியர்கள் தொளியில் நாற்றுமுடியை நட்டுக் கரையேறினார்கள். இளம் பள்ளியர் நேராகத் தத்தம் மனை நோக்கிச் சென்றனர். முதியவளாய ஒரு பள்ளி நாள்முழுதும் வேலை செய்து களைப்புற்று அக்காணியினருகே நின்ற பெருமரத்தடியில் படுத்துறங்கினாள். அப்பொழுது கறுத்து வற்றிய யாக்கையும், கழன்ற பசுங் கண்ணும், தயிர் மத்துப் போன்ற தலையும், சுரை வித்துப் போன்ற பல்லுமுடைய ஒரு கோர வடிவம் அவள் முன்னே தோன்றித் தன் காணி

யிற் பயிரிடத் துணிந்தவரை ஒறுத்து அழிப்பதாக வஞ்சினம் கூறி அச்சுறுத்தியது. மெய் சோர்ந்த நிலையிலும் மரியம்மாளிடம் வைத்த மனம் சோராத அம்முதியோள், 'அச்சந் தீர்க்கும் அம்மையே காப்பாய்'; 'பேய்ப் பயமொழிக்கும் தாயே காப்பாய்' என்று முறையிட்டாள். அடைக்கலமாதாவின் பெயர் கேட்ட அலகை, கரம்பிசைந்து அலக்கணுற்றது. "நேற்று வந்த இம்மரியம்மாள் ஆற்றலாலன்றோ எனக்குரிய காணியைக் கவரத் துணிந்தீர்? பல்லாண்டு இந்நிலத்தில் வாழ்ந்த எனக்குப் பகையாய் முளைத்த உழவரைக் கொல்லவும் வழியற்றுக் குறுகுகின்றேனே! யான் செய்த தீவினையாலே இவ்வடைக்கலத்தாள் காவலூர்க் கரையை வந்தடைந்தாள். இனி யான் என் செய்வேன்" என்று மார்பிலறைந்து அலறி மாயமாய் மறைந்தது. இவற்றைக் கனவிற் கண்ட கிழவி பதைத்தெழுந்தாள். நிலத்தினருகே எவரும் இல்லாமை கண்டு இருளும் வேளையில் தன் வீட்டை நோக்கி நடந்தாள். சேரியில் தத்தம் வேலை முடித்து வேப்பமரத்தடியிற் கூடியிருந்த மாதரிடம் தான் கண்ட கனவை விரித்துரைத்தாள். அக்கதை கேட்டு வியப்புற்ற பள்ளரும் பள்ளியரும் பேய்த்திறமறுக்கும் மாதாவின் பெருமை அறிந்து மனமாரத் தொழுதார்கள். நெடு நாளாகப் பேய்க் காணி என்று பெயர் பெற்றிருந்த விளைநிலம் அன்று முதல் அடைக்கலக் காணி என்று பெயர் பெற்று மாதாவின் திருக்காணியாய் மதிப்புற்று விளங்கிற்று.

இத்தகைய பெருமை வாய்ந்த காவலூரிற் போந்து வறுமையால் வருந்தினோரும், தொழுநோய் முதலிய பிணிகளால் துன்புற்றோரும், மையலுற்று மயங்கினோரும், நஞ்சுண்டு நடுங்கினோரும், கூளியின் வசப்பட்டுக் குறுகினோரும், அடைக்கல மாதாவின் அடியிணை தொழுது நலிவு நீங்கி நலமுற்றார்.

"ஓய வணங்கிடர் ஓயநெடும்பிணி
ஓய உடன்றிடு பேய்
காய வருந்திய காம வருந்துயர்
காதலழுங்கிய நோய்
தேய வழங்கிய தேக மலங்கொடு
தீய வொருங் கறவே

நேய வணங்குறை காவனலூர் நிழல்
நேடிவதிந் துறைவீர்"

என்று வீரமாமுனிவர் அருந்துயருற்றோரை ஆதரித்து அழைக்கு மாற்றால் தீராத வன்பிணியும் தீர்த்தருளும் காவலூர் மாதாவின் பெருமை கனிந்து விளங்குவதாகும்.

---

## 2. கித்தேரியம்மாள்

### நவமாதர் பிறப்பும் சிறப்பும்

பழம் பெருமை வாய்ந்த இலூசித்தானியா தேசத்தின் தலைநக ராய பிராகமா நகரில் காயனென்பான் அரசு வீற்றிருந்தான். வான் பொய்ப்பினும் தான்பொய்யாத் தாகுநதி அந்நாட்டில் வளம் கொழித் தது. ஆற்றுப் பெருக்கற்ற காலத்தும் ஊற்றுப் பெருக்கால் உத விய தாகுநதியின் கருணையால் காயன் ஆண்டநாடு முற்றும் கழனி நாடாய் விளங்கிற்று. கண்ணுக்கினிய கஞ்சமலர்ப் பள்ளியில் அழகிய அன்னங்கள் தம் குஞ்சுகளை அணைத்துத் துயின்ற அந்நாட்டின் செழுமையை,

"பங்கயமேல் ஓதிமங்கள் பார்ப்போடுநற் பள்ளியுற
பொங்கயசீர்ச் சங்கார்ப்பப் பூங்கழனி பூத்தனவே"

என்று கவிஞர் புகழ்ந்துரைத்தார்.

இத்தகைய வளநாட்டை ஆண்ட காயமன்னன் தொன்னெறியே நன்னெறியென்னும் கொள்கையனதலால் கர்த்தர் அருளிய * ஆரண நெறியை அறவே வெறுத்தான். தன் நாட்டில் வாழும் மக்கள் அந்நெறியைத் தழுவலாகாதென ஆணை பிறப்பித்தான். அவ் வாணைக்கு மாறாக ஆரண நெறியை ஆதரித்த மாந்தரைக் கண்ணின்றி ஒறுத்தான்.

இத்தகைய காயன் மனைவி கருவுற்று ஒன்பது பெண்மக்களை ஒருங்கே ஈன்றாள். அப்புதுமையை நாட்டிலுள்ளார் அறிவரேல்

---

* ஆரணநெறி—கிறிஸ்து மதம்.

நகுவரென்று நாணிச் சாம்பிய கோப்பெருந்தேவி நள்ளிரவில், சிலதி என்னும் சேடியை அழைத்து ஆருமறியாமல் அச் சேய்களை ஆற்றில் எறிந்துவிடப் பணித்தாள். அக்கடும்பணி கேட்ட பாங்கி மனமும் மெய்யும் நடுங்கினாளேனும் அரசியின் ஆணையை மறுத்தற்கஞ்சி நவமாதரையும் ஒரு போர்வையிற் பொதிந்து எடுத்துப் புறம் போந்தாள்.

அரசன் மறுத்த ஆரண நெறியில் ஆன்ம நேயம் வாய்ந்து ஒழுகிய அப் பாங்கியினருளால் பாவமொன்று மறியாத பசுங் குழவி கள் தப்பிப் பிழைத்தார்கள். அற்றூர்க் கருள்புரியும் கர்த்தாது அருட் காவலில் அமைந்த நவமாதரும், நாளொரு மேனியராய் வளர்ந்து அருமறை அறிந்து நலமுற்றூர். அழகின் கொழுந்தெனத் திகழ்ந்த அந் நங்கையர் தோன்றுத் துணையாகிய கர்த்தர் கருணையை நாள் தோறும் நினைந்து கசிந்துருகுவாராயினர்.

> "காலைக் கமலமெனக் கர்த்தர்புகழ் வாய்மலரா
> மாலைக் கமலமென வந்தடியிற் கைதுவிய
> முப்பொழுதும் ஓர்பொழுதாய் முற்றறிந்த நாயகனை
> எப்பொழுதும் ஓர்பொருளாய் எண்ணிநனி நாடுவால்".

நறுமணம் கமழும் மலர்களின் அழகினைக் காணுந்தொறும் அந் நங்கையர் பேரழகு வாய்ந்த இறைவன் திருவுருவை நினைந்து பாடு வார். பவழவாய்க் கிளிகளின் மழலை மொழிகளையும், சின்னஞ் சிறு குயில்களின் தீங்குரற் பாணியையும், அஞ்சிறை வண்டுகளின் யாழிசையையுங் கேட்குந்தொறும், 'ஏழிசையாய் இசைப்பயனாய்' இலங்கும் இறைவன் பெருமையை நினைந்து ஏத்துவார். இங்ஙனம் அன்னார் "கண்ட பொருளெல்லாம் கர்த்தரைக் காட்டும் கண்ணாடி யாயின; கொண்ட பொருளெல்லாம் மெய்ஞ்ஞானம் கூறும் வாயா யின".

கருணையின் நிலையமாய கர்த்தர் மன்னுயிர்க்காகச் சிந்திய செந் நீரே செவ்விய அணியாகவும், வானிறையோன் அருளிய ஆரண மொழியே தாலாட்டாகவும், ஆண்டவனைக் கண்டுணர்ந்து கைகூப்பித்

தொழுதலே சப்பாணியாகவும், கருணை வடிவாய கர்த்தரது வண்ணத் திருமேனியிற்பட்ட வடுக்களைக் கண்ணீரால் கழுவியிடும் முத்தமே இன்ப முத்தமாகவும் கொண்டு வாழ்ந்த நங்கையர்,

“தாரானே நாமணியத் தன்திருத்தாள் நாம்காண
வாரானே எந்தையென வாரானை யாடினதே
பாடும் திருப்புகழே பந்தாகக் கொண்டிசலி
ஆடும் படிவாழ்த்த அம்மானை யாடினதே”

என்று கவிஞர் கூறுமாறு பாலப்பருவத்தைப் பண்புறப் போக்கினர்.

கருவிலே திருவுடைய அக்கன்னியரைக் கண்டு பரிவு கூர்ந்த முனிவரொருவர் ஒருநாள் அவரிருந்த இடம் போந்து, அவர்தம் பிறப்பும் சிறப்பும் உணர்த்தலுற்றார்.

“பூவுலகத் தோர்மயங்கிப் புல்லறிவின் நிந்தைசொலத்
தேவுலகத் தோரிறைஞ்சும் தேவமறை கற்றுணர்ந்தீர்
வேற்றுருவம் காட்டிவினை வெம்பகைசெய் துட்புகுத்தும்
சேற்றுருவம் ஆயினபோய்த் தேவரெலாம் நீர்வெறுத்தீர்
வானவரும் முற்றுணரா மாட்சியுடை மெய்க்கடவுள்
ஈனவருள் நீரறிந்தே எந்தைபடி கைதொழுதீர்
எந்தையருள் எண்ணியதற் கேற்றபுகழ் கொண்டிறைஞ்சச்
சிந்தையுடன் நீர்பிறந்த செய்திமுறை கேள்மின் என்றார்.”

அந்நிலையில் ‘உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்று’ நின்ற மங்கையர் உள்ளங்கொள்ளக் காவலன் மக்களாய் அன்னார் தோன்றியவாறும், வையகங் கூறும் வசையினுக்கஞ்சி நதியிடத்தெறியக் கொடியதாய் ஏவியவாறும், சிலதி எனும் சேடி அருள்கூர்ந்து அவரை அருமறைப் படுத்தியவாறும், நாதனருளால் நல்லாறுணர்ந்து அன்னார் நலமுற்றவாறும் முனிவர் வரன் முறையாக எடுத்துரைத்தார். முற்றும் உணர்ந்த முனிவர் வாயிலாக நற்றாயின் கொடுமையை அறிந்த நங்கையர் பெருமூச்செறிந்து நெடுங்கண்ணீருகுத்தார்; ஆயினும் மண்ணரசாளும் உரிமை துறந்தமையாலேயே விண்ணரசாளும் பேறு வாய்த்ததென்று முனிவர் வாய்மொழியாலறிந்த நிலையில் எல்லையற்றஇன்பமுற்றார். அப்பொழுது கர்த்தர் நெறிப்பட்கடன்

னியர் கடைப்பிடித்தற்குரிய கொள்கைகளை அம்முனிவர் நன்கு அறிவுறுத்திப் போந்தார். அவர் கனிவுடன் அருளிய பொருளுரையைப் பொன்போற் போற்றிய கன்னியர் பொறிவாயில் ஐந்தடைத்துப் பெருந்தவம்புரியத் தலைப்பட்டார்.

"ஞானமுறை வாயினராய் நாணமுறை கண்ணினராய்
தானமுறை கையினராய்த் தண்டவஞ்சேர் தாளினராய்"

வாழ்ந்த நவமாதருள்ளும் கித்தேரி என்பாள் தலைசிறந்து விளங்கினாள். பொறையினுக் கணியாய், நிறையின் நிலையமாய் இலங்கிய அந்நங்கை,

"புகழினுமேல் நிற்பவளால் பூவினுமேல் ஒப்பிலளால்
இகழினுந்தான் நோந்திலளால் ஏசினுந்தான் வாழ்த்துவளால்
நீதியர்க்குப் பொய்யா நெறிகாட்டும் நன்னடையாள்
வேதியர்க்குப் பொய்யா விளக்கானாள் அம்மானை".

## சிறையின் எய்திய செல்வியர்

தன் நாட்டில் வாழ்ந்து தான் பகைத்த வேதநெறியைத் தழுவி நவமாதர் ஒழுகுதலை ஒற்றர் வாயிலாக அறிந்த காயன் கடுஞ் சீற்ற முற்றான். அரசாங்க ஆணையை மறுக்கத் துணிந்த மங்கையரைக் கொணருமாறு தன் சேவகரைப் போக்கினான். காவலன் ஆணையை ஏவலாளர் வாயிலாக அறிந்த கன்னியர் ஒன்பதின்மரும், "அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்ச வருவதுமில்லை" என்று உறுதிகொண்டு அவர் பின்னே நடுக்கின்றி நடந்து அரண்மனையை நண்ணினர். கலங்காது தன் முன்னின்ற நங்கையரைக் காயன் உறுத்து நோக்கி இடியேறுபோல் முழங்கினான். "மெய்த்தேவரை விடுத்து நீர் பொய்த் தேவரை வணங்கும் புன்மை என்னோ" எனப் புகைந்து வினவினான். "இன்றே முளைத்தீர்; நன்றென்றறியீர்; நவைப்பட்டுழல்வீர்" என்று அசதியாடினான். இவ்வாறு தம் உருவு கண்டு எள்ளிய மன்னன் சிறுமை கண்டு இரங்கிய மங்கையர் மெய்ம்மறையின் பெருமையையும் அறம் நிரம்பிய மனத்தினர்க்கு இறைவன் நன்னெறி காட்டும் நீர்மையையும் விரித்துரைத்து விளக்கலுற்றார்

"கல்லா தனைத்தையுந்தான் கற்றவனும் காதுணரச்
சொல்லாது உளத்தனைத்தும் சொல்பவனும் தான்தருவாய்
உணர்த்தியக்காற் பேதையரும் ஒன்றறியா மூடருந்தாம்
புணர்த்தியநூல் கற்றவரைப் போல்வதேளி தாதுமேன்றர்"

அவ்வுரை கேட்ட அரசன், "கல்லாதனைத்தையுங் கற்றவன், சொல்லாதனைத்தையுஞ் சொல்பவன் அறிவுறுத்திய உண்மையைச் செப்புக" எனப் பணித்தான். அங்கிலையில் கித்தேரி எண்ணரும் நலம் வாய்ந்த இறைவன் பெருமையை இயம்புவாளாயினள். "ஆதியிலான், அந்தமிலான் ஆக்கையிலான், அங்கிங்கெனாதபடி எங்குமுளான்.

"ஓர்மொழியால் மூவுலகும் ஒன்றாக ஆக்கினனே
ஓர்மொழியால் மூவுலகும் உள்நடுக்கி ஆட்டினனே
சொரிமழையால் இவ்வுலகம் தோன்றுள் அழித்தனனே
எரிமழையால் ஐம்புரங்கள் எல்லாம் அழித்தனனே"

இன்னோரன்ன பேராற்றல் வாய்ந்த இறைவன் பெருமையை ஏழையேன் எங்ஙனம் எடுத்துரைப்பேன். வானோர்க்கும் அறிவரிய இறையோன் பெருமையை ஈனோருள் எளிய யானோ இயம்பவல்லேன்" என்று மனங்குழைந்து மொழிந்தாள். குழலினும் இனிய குரலில் கித்தேரி பேசிய வாசகம் எரியும் தீயில் எண்ணெய் வார்த்தாற் போன்று மன்னன் மனத்திலெழுந்த சீற்றத்திற்கு ஊற்றமளித்தது. கர்த்தர்பால் வைத்த அன்பினல் மெய்பரும்பி விதிர் விதிர்த்து நின்ற மங்கையை நோக்கி,

"நகைப்ப உலகெல்லாமும் நானுக் குலத்தேவரும்
பகைப்ப உலகன்றறியப் பாரச் சிலுவையின்மேல்
நோவஅறை யுண்டவனே நும்மதத்தார் தாழ்ந்திறைஞ்சும்
தேவனன்றே என்றரசன் செப்பிநனி தான்நகைத்தான்."

நாவைக் காவாது காவலனுரைத்த மொழிகேட்டு நங்கை நடுக்கமுற்றாள். மன்னுயிர்க்காகத் தன்னுயிர் வழங்கிய வானிறையோன் பெருமை அறியாது வாயில் வந்தவாறு பிதற்றிய மன்னவன் சிறுமை கண்டு மனங்குழைந்தாள். ஆதவனைக் காணும் பேறிழந்த அந்தகனைப் போல் அருளறம் பூண்ட இறைவன் பெருமையை உணரும் அறிவு

பொறாத மன்னனைத் தெருட்டுதல் தன் கடமையெனத் துணிந்து, "அரசே! எம்மையாளும் இறைவன் ஈனத்தொழில் புரிந்து இடர்ப் பட்டானல்லன். சான்றோர் பழிக்குத் தீங்கிழைத்துச் சிலுவையில் அறைபட்டானல்லன். ஏதம் புரிந்து இழுக்குற்றானல்லன். பிணி யுற்ற குழவியின் இளங்குடர் பொறாத மருந்தினைத் தானருந்திப் பால் நினைந்தூட்டிப் பிணி தீர்க்குந் தாய்போல் மன்பதை தாங்கலாற் றாத தண்டனையை வானிறையோன் தானே மகிழ்ந்தேற்றான்.

"உருவமிலான் ஈங்குருவாய் உற்றவழி காட்டுதற்கே
கருவுமிலா தோர்கருவாய்க் கன்னிமக னுயினன்றன்
மன்னுயிரே மாசொழிந்து வான்கதிமேல் வாழ்ந்துவப்பத்
தன்னுயிரே ஒன்னலர்கைத் தந்திஐந்து மாய்ந்தனன்தான்"

என்று மனங்கசிந்து பேசிய மங்கையின் உரைகேட்ட பின்னரும் மனந் தெளியாத மன்னவன் மீண்டும் ஆண்டவனைப் பழிக்கலுற்றான். மனமுருகித் துவண்டு நின்ற மங்கையை நோக்கி "மாதே! தன் பகையை அழிக்கும் ஆற்றலற்ற உன்னிறைவன் என் பகையை எங்ஙனம் அழித்தொழிக்க வல்லான்? பகைவர் கைப்பட்டுழன்று பழுதுற்ற ஒருவனைப் பரம்பொருள் என்று யான் எங்ஙனம் போற்று வேன்" என்று வினவினான். ஒன்னாரை ஒறுக்குந் திறம் தன்னேரில் லாத் தலைவனிடம் இல்லையென்று பழித்துரைத்த வேந்தனைத் திருத் தக் கருதிய கிழத்தி "அரசே! எம்மையாளுடைய ஐயன் முன்னாள் எசித்து நாட்டின் வழிச்சென்றபோது பொய்த்தேவரது பொற் கோயில்களையும், தேர்களையும் சிறிய நோக்கொன்றால் நூறித் தகர்த் தான். இங்ஙனம் தீயோரை நொறுக்கும் திறம் வாய்ந்த நாதன் கருணைவாய்ந்தவனாதலின் கையிலேந்திய ஐந்து அப்பத்தால் ஐயாயிரவர் பசியை ஆற்றினான். குருடர் கண்களைக் கையால் தைவந்து திறந்தான். மண்மிசையே செல்வதுபோல் மாக்கடல் மேல் ஏகினான். இறந்தவரை ஒரு மொழியால் எழுப்பினான். இத்திறம் வாய்ந்த ஒருவனை ஆற்றலற்றவன் என்று கூறுதல் அடுக்குமோ" என்று மாற்றம் உரைத்தாள்.

இங்ஙனம் மாறி மாறிச் சொல்லாடிச் சோர்விலளாய் நின்ற நங்கையின் மனத்திண்மை கண்டு வியப்புற்ற மன்னவன் "நான்

மறுத்த நீச மதம் நண்ணி என் ஆணையை மறுக்கத்துணிந்த நீர் யார்?" என வினவினன். முன்னரே முனிவர் வாயிலாக எல்லாம் அறிந்திருந்த மங்கை நல்லாள்,

"உன்னரசே மேவினராய் உன்சினமே அஞ்சினராய்
என்னரசே பொய்யுரைப்போம் என்றுன்ன வேண்டாமே
காதலிலா அச்சமிலாக் கண்ட உண்மை காட்டுநவ
மாதரெலாம் உன்றன் மகவாம் எனத் தொழுதாள்."

தவறிழைத்த நவமாதரும் தன் சேய்களெனக் கித்தேரி உரைத்த மாற்றம் மன்னவன் மனத்தில் வியப்பையும் திகைப்பையும் விளைத்தது. மானமும் ஐயமும் மாறி மாறி அவன் மனத்திலெழுந்தன. அரசன் அகத்திலெழுந்த கருத்தினை அவன் முகத்தினலறிந்த நங்கை ஐயமகற்றுமாறு கோப்பெருந்தேவி வயிற்றில் ஒன்பதின்மரும் ஒருங்கே கருவுற்றுப் பிறந்து, அரண்மனைப் பாங்கியினருட்செயலாற் பிழைத்து, ஆன்றோர் அறிவுறுத்திய மறைமொழியால் நன்னெறி யறிந்து நலமுற்ற வரலாற்றை விளக்கமாக எடுத்துரைத்தாள். அந்நிலையில் தன் தேவியிடம் போந்து வினவி உண்மையுணர்ந்த மன்னவன் தொன்னெறியாய நன்னெறி துறந்த அரசிளங் கன்னியரை இன்னுரையால் தேற்றி இசைவிக்கக் கருதினன். நவமணி யனைய நங்கையரை ஆதரித்தணைத்து அரண்மனையினுள்ளே அழைத்துச் சென்றான்.

சேய்களைக் கண்ட தாய் அகமும் முகமும் மலர்ந்தாள். பாரிலுள்ளார் கூறும் பழிமொழிக்கு அஞ்சி, பரிவற்ற மனத்தொடு பசுங் குழவிகளைப் பாங்கியின் கையிற் கொல்லக் கொடுத்த தன் கொடுமையை நினைந்து உள்ளங் குழைந்தாள். அக்கொடுமைக்குக் கழுவாயாக அளவிறந்த அன்பு செலுத்தத் தொடங்கினள். நவமாதர்க்கும் நலங்கொள் பூம்பட்டு உடுத்தாள். அவர் அழகினுக் கழகு செய்ய விரும்பி இழைகளும் குழைகளும் அணிந்தாள். இளவஞ்சியர் சிலரை அவர் மருங்கிருந்து ஏவல்புரியப் பணித்தாள். இவ்வாறு சிலநாள் அறமங்கையர் செல்வ நெடுமாடத்திற் சிறப்புடன் வாழ்ந்திருந்தார். ஐம்பொறிகளாலும் நுகர்தற்குரிய பொருள்கள் நிறைந்த

அரண்மனையின் சுகமறிந்து நங்கையர் இன்ப வாழ்க்கையில் ஈடுபட்டமைவர் என்று மன்னன் கருதினுன்.

ஒருநாள் நவமங்கையருடன் அளவளாவும்பொழுது மண்ணரசாளும் பேறு பெற்ற தன் சேய்களின் பெருமையை மன்னன் மனமாரப் புகழ்ந்துரைப்பானுயினுன். தன் கருத்திற்கிசைந்து முன்னேயோர் போற்றிய தொன்னெறியைக் கடைப்பிடித்துக் கர்த்தர் மதத்தைக் கைவிடுமாறு பரிந்து வேண்டினுன். தகவிலனுய தாதையுரைத்த தீய சொற்களைக்கேட்டு மனம் வெதும்பிய நங்கையர் தேம்பி அழுதார். விண்ணரசனுய இறைவனை வழுத்தும் செல்வம், மண்ணரசாளும் உரிமையினும் மாணப் பெரிதென்று மயங்காதுரைத்தார். மனத்திண்மை வாய்ந்த மங்கையரை நயமொழிகளால் தன் வழிப்படுத்த இயலாத மன்னவன் கொடுஞ் சீற்றமுற்றுன். சீரறியா மங்கையர்க்குச் சிறைத்தண்டம் விதித்தான். அரசன் ஆணைகேட்ட அரண்மனைப் பெண்டிர் அலக்கணுற்றுர். செந்நெறி பிறழ்ந்த மன்னன் மாளிகையில் வாழ்தலினும் சிறைக்கோட்டம் புகுந்து இன்னலுறுதலே சிறந்ததெனக் கருதிய மங்கையர் மனமலர்ந்து இறைவன் திருவருளை நினைந்து ஏத்தினர்.

### வான் கருணையும் வன்சிறையும்

சிறைச்சாலையில் மக்களை அடைத்த மன்னன், நிகழ்ந்த செயல்களை மீளவும் நினைந்து மனம் புழுங்கினுன். தந்தைக்கு நேரும் நிந்தையை இறையளவும் நினையாது தாம் கொண்ட கொள்கையை விடாது பற்றி நின்ற மடவார் நிலை கண்டு மனங் கொதித்தான்.

"அணியளிப்ப எண்ணமிலார் அன்புரைப்ப உள்மகிழார்
பிணியளிப்ப அச்சமிலார் பேதமிலா ஓர்மனத்தார்
நான்பகைத்த நீசமறை நண்ணினராய் நாணமிலார்
வான்பகைத்த நீசரோடு வானவரைத் தான்பகைப்பார்
பொருள் மறுத்தார் கோன்மறுத்தார் பூரண்மாய்க் காட்டியஎன்
அருள் மறுத்தார் தாமினியென் ஆர்ந்தசினந் தாங்குவரோ"

என்று அழன்றுரைத்தான். "சிறைக்கோட்டம் சேர்ந்த பின்னரும் மங்கையர் மனந் தெளியாராயின் அன்னார் சிரங்களை அறுத்துச் சினந்தீர்வேன்" என வஞ்சினமுரைத்தான்.

இவ்வாறு மன்னன் கொடுமை சூழுங்கால் சிறைச்சாலையிலடை பட்ட நவமாதரும் உளங்களிதுளும்ப இறைவனை இறைஞ்சி நின்றார். கதிரவன் மறைந்து சிறைக்கோட்டத்திற் காரிருள் சூழ்ந்தபோதும் நற்றவ மங்கையர் நாதன் திருப்புகழே பாடிநின்றார். அப்பொழுது இருள் செறிந்த கற்சிறையில் ஓர் அருளொளி தோன்றிற்று. அங் கண்மாஞாலத்து எங்குமில்லதோர் அவிரொளியைக் கண்ட மாதர் அதிசயித்து நோக்கினர். அவ்வொளியின் நடுவே ஒரு திருவுருவம் தோன்றி அவர் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தது. பகலவன் ஒளி யால் இதழ் விரியும் கமலம்போல் அவ்வானவன் ஒளியால் வன்சிறை யின் தாழ் நெகிழ்ந்து வாயில் திறந்தது. நகை முகம் காட்டி நின்ற நவமாதரையும் அழைத்துக்கொண்டு அன்னான் கற்சிறையினின் றும் புறப்பட்டான். நவ மாமணிகளின் நடுவே ஒளிரும் திருமாமணி போல் விளங்கிய வானவன், சிறையினீங்கிய செல்வியரிடம் இறைவன் திருவுளக்கருத்தை இயம்பலுற்றான். "நற்றவ நங்கையீர்! நீர் ஒன்றாய்ப் பிறந்தீர். ஒருங்கே வளர்ந்தீர். ஒரு மறை பயின்றீர். ஒருணர்வு பெற்றீர். இவ்வாறு இன்றுகாறும் இணைபிரியாது வாழ்ந்து இறைவனை வாழ்த்திய நீர் இனிப் பிரிந்து அரும்பணி புரியக்கடவீர். மெய்யான மறைப்பொருளை நும் வாயிலாக மன்னுயி ரெல்லாமுணர்ந்து உய்தல்வேண்டும் என்பது கர்த்தர் திருவுளக் கருத்தாகும்" என்று வானவன் உரைத்த வாய்மொழி கேட்டு மங்கை யர் இன்பமும் துன்பமும் ஒருங்கே எய்தினர். கற்றறிந்த மேதை யரும் முற்றுணராக் கர்த்தர் பேதையராய தம்மையும் ஆட்கொள்ள இசைந்த பெற்றியை நினைந்து பேரின்பமுற்றார். ஆயினும் மலரும் மணமும்போற் பிறந்தநாள்முதல் பிரியாது வாழ்ந்த வாழ்வு அழியுங் காலம் வந்துற்றதேயென்று அருந்துயரமுற்றார். பிரிவெனும் பீழை பொறுக்கலாற்றாது மயங்கித் தளர்ந்த மங்கையரை வானவன் மறை மொழிகளால் தேற்றினன். உடன் பிறப்பெனும் பாசத்தால் பிணிப்புற்று நேசத்தாரைகள் சொரிந்துநின்ற மடவார், வானவன்

வழங்கிய அமுதமொழி கேட்டு மனந்தெளிந்து இறைவன் திருப் புகழைப் பாடலுற்றார்.

"ஒருபிறப்போ டோர்மறையோ டோன்றுய்ப் பிணித்தனை நீ
இருபிறப்போய் ஈன்டுநமை இன்றே பிரித்தனை நீ
பிரிந்தனம்நாம் உன்தாள் பிரியாமல் மெய்மறையைத்
தெரிந்தனம்நாம் எங்குநுதி சிந்தஅருள் செய்திரங்காய்''

என்று வானரசை வழிபட்டு வானவன் பணித்தவாறு வெவ்வேறு வழிகளிற் செல்வாராயினர்.

காரிருள் கழிந்தது; கதிரொளி எழுந்தது. மருள் மலிந்த மன்னவனும் மலர்ச்சேக்கை விட்டெழுந்தான். சிறைகாக்கும் காவலர் விரைந்தோடிப் போந்து வேரற்ற மரம்போல் வேந்தன் தாள் களில் வீழ்ந்தார். சிறையிருந்த கன்னியர் நள்ளிரவில் மாயமாய் மறைந்தாரென்று வாய்குழறிக் கூறினர். அன்று தன் சீற்றத்திற்கு ஆளாக நின்ற மங்கையர் தப்பிப் பிழைத்தார் என்றறிந்தபோது மன் னன் வெங்கதம் உற்றான். சிறைக்காவல் கடந்து சென்ற மாதரை நாடிக்கொணருமாறு நாற்றிசையும் தன் சேவகரைப் போக்கினன். மன்னன் காவலாளரை மருட்டிச் சிறையினின்றகன்ற மங்கையர் திறம் நாடெங்கும் பரவியது. ஊக்கமுற்றெழுந்த சேவகர் நாற் றிசையிலும் கடிது சென்றார். காலைக் கதிரொளியிற் குளித்து ஒரு நறும் பூஞ்சோலையை நண்ணிய கித்தேரியைக் கண்ணுற்றார். மன்னன் ஆணையை அறிவித்து அவளை மாளிகைக்கு அழைத்துப் போந்தார். அரண்மனையில் கண்ணெரி தவழ நின்ற காவலன் கித்தேரியை உறுத்து நோக்கி ஏனைய எண்மரும் எங்கு சென்றொழிந்தார் என்று வெகுண்டு வினவினன். மன்னவன் சீற்றத்தை அவன் விழியாலும் மொழியாலும் அறிந்த நங்கை கர்த்தரை நினைந்து நெஞ்சுறுதி கொண்டு வானிறையோன் கருணையை வகுத்துரைக்கத் தொடங்கி னள்.

"தன்னையடுத் தார்க்கிறையோன் தானொளியாய்த் தான்மறைவாய்
என்னைஇதோ காட்டினர்மற் றெண்மரைத்தான் கர்த்தோளித்தார்
எஞ்சாச் சினத்திறையாய் இன்றெநுத்தி நின்றேனே
அஞ்சாது அதைஒநுத்தி ஆற்றுகிற்பேன் நானுமென்றாள்.''

இவ்வாறு இறைவன் அடியார்க்கு அருள்செய்யும் திறத்தை மங்கையின் வாய்மொழியால் அறிந்த அரசன் அன்பினுல் அகங் குழைந்தான்போல் ஆர்வமொழி கூறத் தலைப்பட்டான். "நவமணி போல் ஒன்பதின்மர் என் மக்களாய் வந்துதித்தார். யாரும் பெறுத பேறு பெற்றேன் என யான் இறுமாப்புற்றேன். பண்டிழைத்த தீமையால் என் மக்களுள் எண்மரை இன்று இழந்தேன். எஞ்சி நின்ற உன்னைக் காண என் உள்ளம் கனிகின்றது.

"என்மனமே வெந்தேரிய எட்டுமக்கள் இன்றிழந்தேன்
உன்மனமே செல்லுதிநீ ஓர்மகளாய் வாழுதிநீ
நின்மறையும் நின்னுணர்வின் நேடியநின் தெய்வதமும்
உன்மறையும் நிற்பாய் உன்னேடுநான் வாழ்வனென்றன்".

என்றுமில்லாததோர் மென்மையைக் காவலன் முகத்தில் அன்று கண்ட சித்தேரி அவன் கூறிய சொற்களின் உட்கிடை யுணரமாட்டாது உலைவுற்ருள். முன்பு வன்மொழி பேசிய மன்னவன் சின்ஞளில் மனமாறி இன்மொழி இசைக்கவல்லனே என்றெண்ணி ஐயுற்ருள். கல்லைப் பிசைந்து கனியாக்கும் கர்த்தர் கருணையால் காயன் மனமும் ஒருகாற் கரைந்ததோ என்று கருதி இறைப்பொழுது இன்புற்ருள். வெஞ்சின வேந்தன் தஞ்சமென்றுரைத்த வாசகம் வஞ்சமோ என்று அறிவினுல் துருவத் தலைப்பட்டாள். இங்ஙனம் இருபாற் கவருற்று இடையூசலாடிய சித்தேரியின் உள்ளம் திருவருளின் துணையை நாடுவதாயிற்று.

"தாதைநீ தாய்நீ தயாபரன்நீ எல்லாம்நீ
பேதைநான் உன்னடிசெய் பேறுமலா லோன்றறியேன்
மெய்யறியேன் பொய்யறியேன் மேவியெனைக் காத்திடுமுன்
கையறிவேன் மற்றையோன்றும் காசினிமேல் நானறியேன்"

என்று இறைவன்பால் பொறுப்பை ஏற்றி மன்னன் மாளிகையில் இனிதமர்ந்தாள். அலைகடலிற்பட்ட துரும்புபோல் அலைவுற்ற நங்கையின் மனத்தைத் தேற்றி மெய்ந்நெறியில் நிறுத்தக் கருதிய இறைவன் அன்னுளை அடைக்கலமாக ஏற்று அபயம் அளித்தான்.

"வஞ்சமுனக் கிவ்வுலக மக்களெலாம் செய்யினும்நான்
தஞ்சமுனக் காயினக்கால் தாழ்வுறுமோ என்மகளே
மனங்கெடஉள் ஆசைபுகா வாசலெங்கும் காத்தடைத்துச்
சினங்கெடஉள் ஞானமிது சீலநிலை பேணுவையால்
சீலமுளத் தேஞ்சிலதேற் சீறியெழு நீர்க்கடல்போல்
ஞாலமுள எப்பகையும் நண்ணினுமென் செய்யுமென்றார்".

இங்ஙனம் நாதன் வழங்கிய நல்லுரையைச் செவிவாயாகப் பருகிய மங்கை புத்துயிர்பெற்றவள்போற் கிளர்ந்தெழுந்தாள். பொறிகளால் நுகர்தற்குரிய பொருள்களையெல்லாம் அறவே வெறுத்தாள். தாமரை இலையில் தங்கிநிற்கும் தண்ணீர்த்துளிபோல் அரண்மனையிலமர்ந்து அருந்தவம் புரியத் தொடங்கினள். மென்மலர்ப் பள்ளி மேவாது மண்மீது கிடந்துறங்கினள். புன்னுனிமேல் நீர்போலச் செல்வம் நிலையாதென்று அரண்மனைப் பாங்கியர்க்கு அறிவுறுத்தினள். காற்றில் உதிரும் காய்போல் கூற்றுவன் உற்றக்கால் வீழ்ந்தொழியும் பிறவியைப் பொருளென மதியாது,எண்ணிய எண்ணியாங்கெய்துதற்குச் சாதனமாய மெய்த்தவமே அறிவுவாய்ந்த மக்கள் முயலுதற்குரியதாகுமென்று பல்லோருமறியப் பகர்ந்தாள். இவ்வாறாக மண்ணரசு வாழ்ந்திருந்த மாளிகையில் அன்று முதல் விண்ணரசு செய்தவமே வீற்றிருக்கத் தொடங்கிற்று.

## காமனைக் காய்ந்த கன்னி

இங்ஙனம் கித்தேரி வாழ்ந்துவரும் நாளில் வஞ்சகத்தை உளத்திற் கரந்து வைத்த நஞ்சினும் கொடிய காவலன் தன் தீய கருத்தை நிறைவேற்றத் தலைப்பட்டான். தூய தவமங்கையைச் சூழ்ந்து பணிசெய்த தோழியரை அழைத்து அவள் மனத்தை இன்பத்துறையில் இழுத்து நிலைநிறுத்தப் பணித்தான். மன்னன் கருத்தறிந்த பாங்கியர் மனம் பதைத்தார். ஆயினும் அவன் எதிர் நின்று வாய்திறக்க வகையற்றுத் தலைவணங்கிச் சென்றார். பருவமங்கையாய கித்தேரியைப் பாங்கியர் இன்பநெறிப் படுத்துதல் ஒருதலை என்று கருதிய காவலன், உருவிலும் திருவிலும் அந்நங்கைக்கு இணையான வீரனொருவனை மணமகனாகக் குறித்து வைத்தான். தொன்னெறியில் அழுந்திய பற்றுடையனாய் வாழ்ந்த அவ்வீரனை மணந்து மங்கை

மனையறம் நிகழ்த்துவாளாயின் புது நெறியை மெல்லப் புறக்கணித்து ஒதுக்குவாளென்று மன்னன் மனத்துட்கொண்டான்.

மாநில வேந்தன் செல்வத்தை மாசென நீத்து, பொறிவாயி லடைத்து, கங்குலும் பகலும் கடுந்தவம் முயன்ற சித்தேரியின் மனப்பான்மையை இனிதறிந்த பாங்கியர் இருதலைக்கொள்ளி எறும் பென இடருற்றார். ஆயினும் மன்னன் ஆணையை நிறைவேற்ற முயலாதொழியின் அவன் சீற்றம் தம் சீரையெல்லாம் சிதைக்கு மென்று அறிந்து நற்றவ மங்கையை நண்ணுதற்கோர் வழிநாடினர். காமவேள் என்னும் தேவனைப் பணிந்து அருள்பெற்றாலன்றிக் காவ லன் கருத்து நிறைவுறாதெனத் துணிந்தார். பருவமங்கையர் மீது ஒளி அம்பெய்யும் மாரனை மாநோன்பால் மகிழ்வித்தார்.

மன்னுயிராளும் மாரவேள் போற்றி
மலயத் தென்றலில் மறைந்தோய் போற்றி
பால்நிலாப் போர்த்த பரனே போற்றி
பாவையர் பரவும் தேவே போற்றி
செல்வர் மனையிற் சிறந்தாய் போற்றி
ஏழையர் இல்லத் திருந்தாய் போற்றி
கிளியின் மொழியிற் கலந்தாய் போற்றி
குழலினிசையில் மகிழ்ந்தாய் போற்றி
கற்றவர் நெஞ்சிற் கரந்தாய் போற்றி
மற்றவர் நெஞ்சில் மகிழ்ந்தாய் போற்றி
அருமையிலெளிய அழகே போற்றி

என்று மனங்குளிர்ந்து பரவினர். மங்கையர் கருத்தறிந்த மாரன் விருப்புடன் எழுந்தருளித் தன் கருப்புவில்லின் பெருமையை அன் னார் உள்ளம் கொள்ள எடுத்துரைப்பானாயினன்.

"பார்வணங்கும் கோலினரும் பாவணங்கும் நூலினரும்
போர்வணங்கும் வேலினரும் பூவணங்கும் தேவருந்தாம்
நான்தொடுத்த கோல்வணங்கி நாளுமெனக் கட்படுவார்
இவ்விரத மங்கையின்றே என்விரக மங்கையுமாய்
செவ்விரதம் நீத்தழிக்கும் தேன்கணையைத் தாங்குவளோ"

என்று வீரம்பேசி வில்லொடும் கணையொடும் சித்தேரி இருந்தவிடம் நோக்கி விரைந்து போந்தான்.

நித்தியனாய் நிர்மலனாய் நிறைவாய் நீங்காச் சித்துருவாய் நின்ற கர்த்தனைக் கண்ணீர் சொரிந்து வணங்கி நின்ற கன்னியை நோக்கி மாரன் கருப்புவில்லை வளைத்தான். மறைந்து நின்று மலர்க்கணை தொடுத்த மாரனை மங்கை சற்று முகம் எடுத்துச் சீறி நோக்கினாள். அவ்வளவில் 'நச்சுடை வடிக்கண் மலர் நங்கை'யின் முன்னிற்க இயலாது மாரன் அலறி நடுங்கி வில்லும் கணையும் வீசி எறிந்து வெளியே ஓடினான். காமனைக் கண்ணழலாற் காய்ந்து வெருட்டிய மங்கையின் திறங்கண்டு சேடியர் மறுக்கமுற்றார். "விண்ணும் மண்ணும் வென்றுயர்ந்த மாரனை நெறித்த புருவத்தால் வெருட்டியடித்த நங்கையிடம் எளியராய எங்கள் சூழ்ச்சி என்னாகும்" என்று ஏங்கினார். எனினும், மன்னன் ஆணையை மறுத்தற்கஞ்சி, வண்ணமும் சுண்ணமும் தண்ணறுஞ் சாந்தமும் பூவும் புகையும் ஏந்தி, சித்தேரியைக் காணப் புறப்பட்டார்.

மாளிகையில், அழுதழிந்த கண்ணினளாய்த் தொழுதுயர்ந்த கையினளாய் அமைந்த சித்தேரியைச் சேடியர் கண்ணுற்றார். மானினம் போலவும், மயிலினம் போலவும், மருங்கே சூழ்ந்து நின்ற பாங்கியரைப் பரிந்து நோக்கிய பாவை,

"வீணாய் உடல்பேணி வேந்துணையும் என்னுயிரைப்
பேணார் ஒருவருமிப் பேருலகில் என்றழுதாள்."

கண்ணீர் சொரிந்த காரிகையின் கருத்துணராப் பாங்கியர் "மாதே! உன் உயிரை வருத்தும் வெந்துயர் யாதோ?" என்று வினயமாக வினவினர். இரக்கமுற்று வினவிய தோழியரை நோக்கி "ஆருயிரனையீர்! என்மனநோய்க்கு மருந்தும் உண்டோ! உயிர்த்துணையைநாடி என் நெஞ்சம் உருகுகின்றது. என் ஆசையின் கனியைக்காணும் பேறு பெறாது ஆவி அலமருகின்றது" என்று கரவாதுரைத்துக் கண்ணீர் பெருக்கினாள். காமனைக் கடிந்த நற்றவக் கன்னியின் கருத்துணராத் தோழியர் 'தலைமகள் தன் பருவத்திற்கேற்ற கவலைகொண்டாள்' என்றெண்ணிப் பரிவு கூர்ந்து நோக்கி "மாதே! நின் இன்னுயிர்த் துணைவனைக் காணுங் காலம் வந்தடுத்தது. மனத்திற்கினிய தலைவன் ஒருவனை மன்னன் உனக்காக நாடிக்குறித்துள்ளான். இந் நற்செய்தி

யை அறிவிக்குமாறு நின் அடித்தோழியராய எம்மை ஈண்டு அனுப்பினன்" என்று இயம்பினர்.

பாங்கியர் உரைகேட்ட பாவை வெங்கனலில் வீழ்ந்த மலர்போற் சாம்பினள். உள்ளங்கவர்ந்தெழுந்த பெருந்துயரைப் பொறுக்கலாற்றாது,

"காதற் றுணையொருவர் கர்த்தரெனக் கேளையவர்
சாதற் றுணையெனப்போய் சாற்றுமின்நீர் என்றகன்றள்"

மங்கலம் ஏந்தி நின்ற பாங்கியர் தவநங்கையின் மொழிகேட்டுத் தயங்கி மயங்கினர். பின்னும் காதலுரை யாடினல் மங்கை சாதலும் கூடும் என்றஞ்சி விரைந்தோடி வேந்தனிடம் போந்து நிகழ்ந்ததனைத்தையும் எடுத்துரைத்தார். மங்கையின் மனத்தை மாற்றுதற்குத் தான் பட்டபாடெல்லாம் பாழாகக் கண்ட மன்னவன் அவளை அழைத்து வரப் பணித்தான். அவலமே வடிவாக வந்தடைந்த மங்கையைக் கண்டபொழுது மன்னன் மட்டற்ற சீற்றமுற்றான்.

"சூடுகாட்டு மாலையெனத் தொண்டர்மறை சேர்ந்தனையே
படுகாட்டும் நிந்தையும்நீ பட்டழிய உன்நினைவோ
தந்தையென வேந்தனெனத் தந்தபணி கேளாத
சிந்தைஉனக்குன் வேதம் செப்பியதோர் கற்பனையோ
தீவினையே அஞ்சினைநீ செப்பியஎன் சொல்மறுத்தல்
தூவினையோ ஆயினுமென் தோள்வலியும் அஞ்சிலையோ"

என்று துடுக்காகப்பேசினன். சூழ்வினை அனைத்தும் சூழ்ந்த வேந்தன் தன்னை ஒறுத்தல் திண்ணமென்றறிந்த தவமகள் வணங்கிய வாயினளாய்,

"கோதையின்வாய்த் தேன்பொழிவேற்கோமானே அன்புணர்ந்து
பேதையின்வாய்ச் சொற்கேட்டுப் பின்சினத்தல் நீதிஎன"

இரந்து வேண்டி முன்னமே தன்னையாட்கொண்ட அருட்பெருங் கடவுளின் தகைமையைக் கூறத்தலைப்பட்டாள்.

"தந்தையெனை முற்றறியாத் தாய்பகைத்து விட்டேறிய
முந்தையென வானிறையோன் முன்பெனக் கைக்கொண்டனன்தான்

அன்னுளில் முற்றெனைக்காத் தாதரித்த நாயகன்தான்
இன்னுளு முற்றெனையாண் டென்னுயிரோ டென்னுடலும்
தானெருவன் கைக்கொளவும் தந்தேன்நான் தானுமினி
நானெருவன் ஆள்வனென நாயகன்கைப் பற்றினுல்
அன்றவர்கைக் கொண்டபொருள் ஆசையுடன் மற்றெருவன்
இன்றவர்கை யிற்பறிப்ப எய்திலினி ஆவதுண்டோ
தானும்விடான் முன்னவற்கே தந்தபொருள் பின்னெவர்க்கும்
நானும்விடேன் நீதிநலோய் ஞாயமன்றே கூறவென்றுள்''

*இங்ஙனம் கித்தேரி பேசிய வாசகம் மன்னன் மனத்தை அறுத்தது. தான் கட்டிய மனக்கோட்டை அனைத்தும் மங்கையின் பிடிவாதத் தால் இடிந்து பொடியாயிற்றென்று அறிந்தான். புதுக்கலத்திற் பொங் கும் பால் போல் வெகுண்டு எழுந்து கொடிய வஞ்சினம் கூறினுன். 'தந்தைசொல்மிக்க மந்திரமில்லை' என்னும் அறவோர் மொழியை உதறி எறிந்த மங்கையை ஒறுத்துத் தன் ஆணையை நிலைநிறுத்த எண்ணினுன்.*

''நானே பகையுனக்கு நானுவிதத் திலேன்கை
தானே உனவருத்தித் தந்தஉயிர் தான்பறிப்பேன்
நீவணங்கும் நாயகனை நீக்கிமணத்தின் றமைந்தால்
பூவணங்கும் என்மகள்நீ போய்மறுத்தால் என்பகைநீ''

*என்று இடியேறுபோல் முழங்கினுன். முறையிகந்து பேசிய மங் கைக்கு மீண்டும் சிறைத்தண்டம் விதித்தான். மன்னன் பணித்த வாறு சேவகர் மங்கையின் கை கால்களைத் தளையாற் பிணித்துச் சிறைக் கோட்டத்திற்சேர்த்தார்.*

## பொம்பேரு மலைச்சிறப்பு

*இருள் நிறைந்த கடுஞ்சிறையிற் புகுந்த கித்தேரி கர்த்தர் அருளையே கருத்திலமைத்துக் கசிந்துருகுவாளாயினுள். நஞ்சினும் கொடிய தாதை இன்னும் என்னென்ன தீங்கிழைப்பானே என்று எண்ணி நடுங்கினுள். மானமும் நாணமும் துறந்த மன்னவன் மேலும் வஞ்சகமியற்றி நலிவானேல் எவ்வாறு தன் கற்பினைக் காப்ப தென்றஞ்சினுள். அந்நிலையில் கர்த்தரை ஈன்ற கன்னித் தாயே கதி யெனக் கருதி மரியம்மாளைத் தஞ்சமடைந்தாள்.*

"வானோர்க் கழகியலே மண்ணோர்க் குயிர்நிலையே
ஈனோர்க் குறு துணையே என்னரசே மாமரியே
கல்லார்க்கு நூற்கடல்நீ காவலிலார்க் கோரரண்நீ
இல்லார்க்கு மேற்றிருநீ எல்லார்க்கும் எல்லாம்நீ
கனியீன்ற கன்னிலைகயே கன்னியர்க் கெல்லாந்தாயே
இனிதீன்ற கன்னியெனும் என்மேல் இரங்கிலையோ
மனங்குளிர்க்கும் செங்கதிரை வாய்த்துடுத்த மேனிநலாய்
இனங்குளிர்க்கும் ஓர்கதிரை இன்றெனக்கு நல்கிலையோ"

என்று ஏங்கினள்; அழுதாள்; தொழுதாள். அன்பால் நினைப்பவர் கண்ணெதிரே விரைந்து தோன்றும் வானரசி காரிருளைக் கிழித் திலங்கும் மின்னற்கொடி போன்று மங்கையின் முன்னே தோன்றி னள். வானவர் பல்லாயிரவர் புடைசூழ, போர்முரசும் தூரியமும் பொன் முழவும் துந்துபியும் முழங்க, குழலும் யாழும் கலந் தொலிப்ப, பாமாரியும் பூமாரியும் பரந்து பொழிய, அன்று மலர்ந்த தாமரையை வென்ற முகத்தொடு விளங்கிய வானரசியின் அரு ளொளியைக் சித்தேரி கண்ணால் முகந்து பருகிக் களிப்புற்றாள். கன்னியன்னையின் கருணைசான்ற நோக்கால் நங்கையின் கையிலும் காலிலும் அமைந்த இருப்புவிலங்கு இற்றொழிந்தது. கைகள் தலைமீ தேற, கண்ணிலெழுந்த ஆனந்த வெள்ளம் மெய்யெலாம் நனைப்ப, மெய்மறந்திருந்த மங்கையை வானரசி அன்பினால் எடுத்தணைத்து, இன்புறத் தழுவி அபயம் வழங்கினள்.

"தாயுனக்கு நானிருக்கத் தாழ்வுனக்கோன் றுண்டாமோ
நீயெனக்கு நன்மகளாய் நின்றுசயம் கோள்வை என்றாள்"

அருளே உருவாயமைந்த அன்னை அடைக்கலம் தந்தாள் என்றறிந்த போது சித்தேரி அச்சம் துறந்தாள்.

வானரசியின் திருமகளாய்த் திகழும் பேறுபெற்ற நங்கையை வானவர் ஞானநீராட்டினர். அவள் நலம் சிறக்குமாறு நவையறு குணங்களென்னும் நல்லணிகளைப் பூட்டினர். ஞானமே காதணி யாய், நாணமே நெஞ்சணியாய், தானமே கை வளையாய், தாழ்ச்சியே காற் சிலம்பாய்ப் பூண்டு நின்ற சித்தேரியின் புத்தழகைக் கண்டு

வானவரும் வியப்புற்ருர். இங்ஙனம் நலம்பெற்றிலங்கிய நங்கையை மீண்டும் வானரசி ஆசையுடன் எடுத்தணைத்து உறுபகை அறுக்கும் இருபடை நல்கினள்.

" ஊனினமாய் இவ்வுலகில் உற்றுதித்த என்புதல்வன்
தன்பகைவென் றெவ்வுயிரும் தாங்காத்த ஓர்படையாய்
உன்பகைவென் றேங்கவும்நீ ஒண்படையீ தாதுமென்றே
தானேந்தும் ஓர்சிலுவை தந்தனளே போற்றியதைத்
தேனேந்தும் மென்மொழியாள் சேர்த்தினள்தன் மார்பணியாய்
மீட்டரிதாம் கன்னிநிலை மீளாது நிற்குமெனக்
காட்டரிதாம் ஓர்துறியாக் காக்குமிதே என்றுரைத்தோர்
பொன்னுழி பூவிரலிற் போட்டனள்... ... ... ..."

வானவர் வழங்கிய நல்லணிகளையும், கன்னித்தாய் கனிந்தளித்த இருபடைகளையும் தாங்கிநின்ற கித்தேரி புத்துயிர் பெற்றவள்போல் உள்ளம் தழைத்தாள். தவநெறியில் நின்ற நங்கையைக் கன்னித்தாய் கடுஞ்சிறையினின்றும் விடுவித்து, வெம்பேய் அணுகாத பொம்பேர் என்னும் மலையிற் போந்து நற்றவம் புரியப் பணித்து மறைந்தாள்.

மின்னுருக்கொண்டு வந்து தன் புன்மையைப் போக்கிய கன்னித்தாய் மறைந்தபொழுது, ஆவினைப் பிரிந்த கன்றுபோல் மங்கை அருந்துயருற்ருள். இங்ஙனம் தயக்கமுற்றுநின்ற மங்கையை வானவன் ஒருவன் சிறைக்கோட்டத்தினின்றும் வெளியே அழைத்துச் சென்ருன். அன்னவன் பின்னே நடந்த கித்தேரி, காடும் மலையும் ஊடுருவிச் சென்று வானரசி குறித்த வளமலையை வந்தடைந்தாள். அப்பொழுது வானவன் விடைபெற்று மறைந்தான். கார் தவழும் மலைமுடியும், நீர் தவழும் சாரலும் நங்கையின் மனத்தைக் குளிர்வித்தன. பொம்பேரு மலையின் இயற்கை அழகு எல்லையற்ற இன்பம் பயந்தது. கொம்பார் சோலைக் கோல வண்டுகள் பாட்டிசைக்கும் பொம்பேரு மலையில் தன்னை வீற்றிருக்கச் செய்த அன்னையின் கருணையை நினைந்து அகங்குழைந்து பாடினுள்.

" ஒண்டலத்சேர் ஆலயமே ஒன்னலர்வேல் போர்க்களமே
விண்டலத்சேர் செவ்வழியே வெற்றிதரும் பொம்பேரே"

என்று அம்மலையகத் தமைந்த இறைவன் திருக்கோயிலை மனமாரப் புகழ்ந்து போற்றினள். வானவன் அருளால் வந்துற்ற தோழியரைத் துணைக்கொண்டு நாள்தோறும் சித்தேரி திருக்கோவிற் பணி செய்து வந்தாள். விரையுறு நறுமலர் கொய்து, பூமாலை தொடுத்து இறைவனைத் தொழுதாள்; குழலும், யாழும், அமிழ்தும் குழையப் பாடினள்.

“ வானகத்தோர் பணிகட்ப வையகத்தோர் பணிந்திரப்ப
தானகத்தோர் ஒப்பிலனுய்த் தகைமிகுமெம் பெருமானே
தகைமிகுமெம் பெருமானைத் தாணியெலா மறியாதேல்
பகைமிகுமேன் உயிர்காத்த பங்கயத்தாள் பணியேமோ.

மண்ணுளும் வேந்தரெலாம் மகிழ்ந்தவன்தான் செய்திறத்தால்
விண்ணுளும் தனிக்கோலாம் வீடருளெம் பெருமானே
வீடருளெம் பெருமானை விரும்பியநாம் பிரியாதே
கேடருளெம் துறைதீரக் கெழுமலர்த்தாள் பணியேமோ.

நூலிலனுய் முற்றுணர நுவலிலனுய் முற்றுணர்த்த
வேலிலனுய் முற்றனைத்தும் வென்றளெம் பெருமானே
வென்றளெம் பெருமானை வெறுத்தபகை நீத்தறத்தால்
நின்றளெம் உளம்வாழ நிமலன்தாள் பணியேமோ.”

என்ற இனிய பாடல்களைச் சித்தேரியும் மங்கையரும் கல்லும் புல்லும் கரைந்துருக, மனங் கலந்து பாடினர். காமமென்னும் நாமமும் கடிந்த கன்னியர், கர்த்தரை நினைந்து அல்லும் பகலும் அருந்தவம் புரிந்தனர். இங்ஙனம் வாழ்ந்த நங்கையர் அனைவரும் சிறந்த சீலம் வாய்ந்தவரேனும், அவருள் சித்தேரி தலைமை சான்றுள். பூவினத்துள் கமலம்போலவும், புள்ளினத்துள் அன்னம்போலவும்,

“ ஆண்மையினல் ஒண்தவத்தால் ஆரருளால் காட்சியினல்
கேண்மையினல் மற்றவருள் சித்தேரி தோன்றினளே ”

இங்ஙனம் ஒப்பற்றவளாய் விளங்கிய சித்தேரி, ஆருயிர் அனைத்தையும் ஆதரித்துப் பேணுவாள். மற்றைய மங்கையர்க்குப் பாங்கி போல் அமைந்து பணியாற்றுவாள். நலிவுற்ற உடல்களை நன் மருந்தால் போற்றுவாள். தளர்வுற்ற உயிர்களை அறிவுரையால் தேற்றுவாள். வானிறையோன் கருணையால் வாரி வழங்கும் பேரின்ப

அமுதின் சுவையறிந்தோர் ஐம்பொறிகளால் நுகரும் சிற்றின்பத்தை நாடுவரோ என்று நயம்பட உரைப்பாள். மெய்ப்பொருளாய இறைவனை அறிந்து வணங்காது, பொய்த்தேவரை வணங்கி மானிடப் பிறப்பின் பயனை இழக்கும் மாந்தரது பேதைமை கண்டு இரங்குவாள். கரும்பிருக்க இரும்பை மென்று, குளிர்பூஞ்சோலை வழியிருக்கக் குழியில் வீழ்ந்து இடருறும் ஏழைமக்களைச் செந்நெறியிற் சேர்க்குமாறு கருணைசான்ற கர்த்தரைக் கண்பனி சோர நின்று வேண்டுவாள்.

"தீதொழிய உள்விளக்கும் செஞ்சுடரோன் உன்னை என்பார்
கோதொழிய ஓர்கதிரைக் கோவஃதுலகில் தோன்றயோ
தாய் தயையோ டாளும் தனிக்கோலான் உன்னை என்பார்
நீ தயை ஓர்ந்து இங்கரசாள் நீசவெம்பேய் ஓட்டாயோ
பொய்வழிநீத் தாரனூல் போததரு உன்னை யென்பார்
மெய்வழிநீத் துற்றமயல் விட்டறமெய் ஓதாயோ
பாரனைத்தும் காத்த பரிபாலனென உன்னை யென்பார்
பாரனைத்தும் உன் குடைக்கீழ்ப் பட்டடங்கக் காவாயோ"

என்று கதறியழுது கலங்கி நிற்பாள்.

## புரோசன் மாற்றமும் காயன் சீற்றமும்

இவ்வாறு தன்னுயிரைத் தவநெறியில் நிறுத்தி மன்னுயிர்க்காக நாடோறும் இறைவனிடம் மன்றுடி நின்ற கித்தேரி குறுநில மன்னனொருவன் இழைத்த பெரும் பிழையை அறிந்து கனலிடைப்பட்ட மெழுகுபோல் உருகுவாளாயினள். புரோசன் என்னும் பெயர்வாய்ந்த புரவலன் ஒருவன் நிறைமொழி முனிவர் வாயிலாக மறைமொழியின் பெருமை உணர்ந்து பொய்த்தேவர் வழிப்பாட்டைப்போக்கி வானிறையோனை வழிபட்டு வந்தான். இவ்வாறு சிலநாள் மெய்ந்நெறியில் வாழ்ந்து வந்த அன்னோன் மருளூற்று முறை பிறழ்ந்து நன்னெறியை மறுத்து மீண்டும் பழைய புன்னெறியைக் கடைப்பிடித்தான். அவ்வளவிலமையாது, கர்த்தர் நெறியைப் பற்றிநின்ற தன் நாட்டுக் குடிகளையும் துன்புறுத்தத் தொடங்கினான். இங்ஙனம் இயேசு நெறியை மாசுறுத்திய புரோசன் செயலறிந்து கித்தேரி மனம் உளைந்து சாம்பி

னுள்; சேயிழந்த தாயெனச் சிந்தை கலங்கினுள்; கங்குலும் பக லும் கண்ணிமையாது வானரசை நோக்கி வருந்தி அழுதாள்.

"மீளாச் சயத்திறத்தோய் மேலறிவின் மேன்மையினேய்
ஆளாய் எனையுடையோய் ஆரருளின் பாற்கடலோய்
உன்தருதி தந்துகொண்ட உன்னடிமை மற்றெருவன்
நின்தருதி நிந்தைபெற நின்றவண்டால் நன்றுனக்கோ

நோயாக நீவருந்தி நோய்தின்நட்ட பூவனமே
தீயாகப் பேய்வினையால் தீய்ந்தெரிந்தால் நன்றுனக்கோ
நெஞ்சழம்நீ ஆண்டிருக்க நீதுணிந்தால் ஒன்றறிதோ
வஞ்சழம்நீ கண்டிருக்க மாற்றல்உனக் கின்றறிதோ"

என்று வாடி மயங்கினுள். அந்நிலையில் அன்னுள் உள்ளத்தில் புதிய தோர் ஊக்கம் பிறந்தது. கருணை உருவாய கர்த்தரை நோக்கி "ஐயனே! மன்னுயிர் காக்கும் மெய்யனே! வழுக்கி விழ்ந்து இழுக் குற்ற புரோசனை மீண்டும் செந்நெறியிற் சேர்த்தல் வேண்டும். இன்றேல் நும் அடியளாய ஏழையேன் இறந்து ஒழிய விடைதரல் வேண்டும்" என்று உளங்கரைந்து கூறினுள். இவ்வாறு அல்ல லுற்று ஆற்றுது அழுத கித்தேரியைக் கண்டு இரங்கிய இறைவன் அவ்வாறே ஆகும் என்று அருள்செய்து மெய்யாய வேதத்தின் கருத்தை புரோச மன்னனிடம் போந்து விரித்துரைக்கப் பணித்தார். இறைவன் ஆணையைத் தலைமேற்கொண்ட தவ மாது உளங்கிளர்ந்து எழுந்து புரோசன் அரசுவீற்றிருந்த தலைநகரை நோக்கிப் புறப்பட்டாள். விண்மீன்களின் நடுவே விளங்கும் தண் மதிபோன்று கித்தேரி தோழியர் புடைசூழ அம்மன்னன் மாளிகை யில் சென்று நின்றுள். அஞ்சாத நெஞ்சினளாய் வெஞ்சின வேந்தன் முன்னே போந்து விழுமிய மறையின் பொருளை விளக்கலுற்றுள்.

"காற்றுவழி சாய்ந்தோதுங்கும் காற்றடிபோற் கயவர்
கூற்றுவழி தன்மனழம் கோணிநிலை சாய்தல்நன்றே
வானிருள மண்நடுங்க மன்னுயிரெல்லாம்வெருவ
தானருளி மின்முகில்மேல் சாய்ந்தெழுந்து கோபமிக
எண்டிசையும் தீய்க்குமழல் ஏந்தியகண் நோக்கமதால்
கண்டிசையும் யாவுமற கர்த்தர்நடுத் தீர்க்கவா

தன்னையும் தன்வாய்மறையும் தள்ளிநின்றார்க் காக்கினையிட்டு
உன்னையும்தான் கேட்குமிடத் துட்குழையாத் தாங்குவையோ
நீதிபரன் கோபம்அன்று நீங்கமனத் தின்றழுதே
ஆதிபரன் ஆர்ந்ததயை அண்டிநிற்பாய் மன்ன என்றாள் ''

அவ்வுரை கேட்ட புரோசன் பொங்கி எழுந்தான். தன் அவைக் களத்தில் அஞ்சாதுபோந்து அடாதமொழி பேசிய பேதையை ஒறுக்கக் கருதி உடைவாளை உருவினான். மாதரைக் கோறல் ஆகாதென்று மருங்கு நின்றார் தடுத்தமையால் தவறிழைத்த மாதை ஒரு தனிச் சிறையில் அடைப்பித்தான். முன்னரே இருமுறை சிறையிருந்தாற்றிய அருந்தவச் செல்வி மண்ணுலகிற் பிறந்தோர்க்குரிய முச்சிறையையும் முறையாக விளக்கிக்காட்டுவாள்போன்று மூன்றாம் முறையும் சிறைபுகுந்தாள். மலர்ந்த முகத்தோடு சிறைக்கோட்டத்திருந்து இறைவன் கருணையை நினைந்து உருகிநின்ற மங்கையின் கோலங் கண்ட மாந்தர் கதிரவனை நோக்கிய கமலம்போல் அகம் மலர்ந்தார். விழுமிய பொருளை இனிய மொழிகளால் மங்கை இயம்பிய பொழுது கேட்டோர் மனத்தில் அஞ்ஞான இருள் அகன்று மெய்ஞ்ஞான ஒளி பெருகுவதாயிற்று. மனக்குறையுற்றோர் பலர் சிறைக்கோட்டத்தைச் சார்ந்து மங்கையின் மறைமொழி கேட்டு மன வாட்டந் தீர்ந்தார். கால்முடங்கினான் ஒருவன் பிறர் கைத்தாங்கலிற் சென்று சிறைச்சாலையின் வாயிலில் இறங்கிய பொழுது கருணை நிறைந்த மனத்தினளாய கித்தேரி அவனை முகமலர்ந்து நோக்கி, "வருக" என்றழைத்தாள். அந்நிலையில் அம்முடவன் எழுந்து நடந்து அருந்தவநங்கையின் கருணையைக் கசிந்துருகி வாழ்த்தினான். இன்னும் தெய்வ நலம் வாய்ந்த மங்கையின் அருள் பெறக் கருதிய அந்தகன் ஒருவன் கையாலும் காலாலும் தரையைத் தடவித் தடம் பிடித்துச் சென்று சிறைக்கோட்டத்தின் புறத்தே நின்று அகங் குழைந்து அழுதான். கண்ணிலான் துயர்கண்டு தரியாத கித்தேரி அவன் அருகேபோந்து மணியற்ற கண்கள் இரண்டையும் தன் மலர்க் கரத்தால் துடைத்தாள். அவ்வளவில் கண்டோர் வியப்புறக் கண் திறக்கப்பெற்ற அன்பன் நற்றவ மங்கையைக் கண்குளிரக் கண்டு ஆவார வழுத்தினான்.

" நோய்நீங்கக் கண்தெளிய நோன்டிசேலக் காதுணா

பேய்நீங்க நீங்காப் பெருந்திறத்தாள் செயபுதுமை
கண்டவரும் கேட்டவரும் கைவிரித்தோ என்றுவந்தார்''

இவ்வாறு முப்பகல் சிறையிருந்து செயற்கரிய செய்த சித்தேரியின் திறம் எப்பாலும் விரைந்து பரவிற்று. அன்னாள் ஆற்றிய புதுமை யைக் கேள்வியுற்ற புரோசன் மனங்கொதித்து மாயத்தாற் கண் மருட்டும் மங்கையை மறுநாளே கொன்று முடிப்பதாக வஞ்சினம் கூறினான்.

வருந்தி வந்தடைந்த உயிர்களின் அருந்துயர் களைந்து அவர் திருந்திய முகம் கண்டு திளைத்த சித்தேரி கங்குல் வந்திறுத்தபோதும் சிறைக்கோட்டத்தில் ஒருமையுடன் இருந்து இறைவன் திருவருளை நினைந்து உருகுவாளாயினாள். அந்நிலையில் கருமுகிலைக் கிழித்தொளி ரும் மின்னொளி போன்று இருள் செறிந்த சிறையகத்து இன்னொளி சான்ற வானவன் ஒருவன் வந்து தோன்றினான். இன்பவெள்ளமா யெழுந்த பேரொளியைக் கண்டு களிப்புற்று நின்ற சித்தேரியை அவ் வானவன் முகமலர்ந்து நோக்கி "இன்றே இச்சிறையின் நீங்கிப் பொம்பேரகத்தைச் சேர்க" எனப் பணித்தான். புன்னெறியில் வழுக்கி வீழ்ந்த புரோசன் உண்மை உணர்ந்து நன்னெறியிற் சேரு மளவும் சிறையிருந்து நோன்பு செய்யக் கருதிய சித்தேரி

" அவன் மீளலொன்றே அவன்கையில்நான் சாதலொன்றே
இவையிரண்டில் ஒன்றேழியேன்''

என்றுரைத்து நின்றாள். தவமங்கையின் மனதிட்பமறிந்து வியந்த வானவன் இறைவன் திருவுளக் குறிப்பினைத் தெரிவித்து அவள் வேண்டிய வரம் பொம்பேரு மலையிற் போயினபின்பு சித்திக்குமெனப் பகர்ந்தான். அவ்வுரை கேட்ட சித்தேரி மனந்தேறி, வானவன் அடிபணிந்து, வாயில் திறந்து நின்ற சிறைச்சாலையை விட்டகன்றாள். வன்சிறைக் கோட்டத்தின் வாயில் தானாகத் திறந்து வழிவிடக் கண்ட சேவகர்கள் மங்கை தழுவிநின்ற சமயமே மெய்ச்சமய மென்று துணிந்து தாமும் அந்நெறியைத் தழுவினர்.

காலையில் கதிரவன் ஒளிவீசி எழுந்தான். வெஞ்சின வேந்த னும் தன் வஞ்சினம் முடிக்க எழுந்தான். அப்பொழுது சிறைச்

சாலைக்காவலர் அரசன் அடிபணிந்து எழுந்து சிறைக்கோட்டத்தினின்று மங்கை வெளிப்பட்ட செய்தியை விளம்பி நின்றார். சேவகர் உரைத்த மாற்றம் வெந்தநெடும் புண்ணில் வேலெறிந்தாற்போன்று மன்னன் மனத்தை வருத்தியது. வஞ்சமொன்றறியாத நாட்டு மக்களை ஏமாற்றி நள்ளிரவில் தப்பி ஓடிய மங்கையின் செயல் கருதி மன்னவன் நகைத்தான். வலையினின்று தப்பிப் பிழைத்த கலைமானைத் தொடரும் வேடன்போல் சிறையினீங்கிய மங்கையைப் பற்றிக் கொணருமாறு சீறி எழுந்தான். கடுந்தவ மடந்தை பொம்பேரு மலையிலுள்ளாளென்று கேள்வியுற்ற காவலன் காரெனக் கடிது சென்று அம்மலையின் மேல் மண்டினன். பொய்ம்மைபேசி வஞ்சித்த பேதையைப் பொம்பேரு மலையிற் பலி கொடுப்பதாகப் புகைந்துரைத்தான். அந்நிலையில் அவன் கண்கள் அவிந்தன. கைகளும், கால்களும் வழங்காதொழிந்தன; மலையின் அடிவாரத்தில் வேலெறியுண்ட வேங்கைபோல் வேந்தன் வீழ்ந்தான்.

ஆயினும் புறக்கண் அவிந்த நிலையில் அகக்கண் திறந்தது. அதுகாறும் புன்னெறியென்று புறக்கணித்த புது நெறியே நன்னெறியென்று அவனுள்ளத்தில நன்கு விளங்கிற்று. கண்ணிலான் பெற்றிழந்தாற் போன்று அந்நெறியை முன்னர்த் தழுவிப் பின்பு நழுவவிட்ட புன்மையை நினைந்து மனம் புழுங்கினன். மதிகெட்டு உழல்வோரை மறக்கருணையினல் ஆண்டு கொள்ளும் வானிறையோனை வாயார வாழ்த்தினன். தன் நாட்டில் வலிய வந்து இறைவன் அருளிய இலங்குநூலின் பெருமையை இசையினும் இனிய மொழிகளால் இயம்பிய மங்கையின் இணையடி தொழுதாலல்லது உய்தியில்லை என்றுணர்ந்தான். பொறி கலங்கி, நெறி மயங்கி நின்ற சேவகரைக் கூவியழைத்து, பொம்பேரு மலையின் உச்சியில் உறைந்த தெய்வக் கன்னியிடம் தன்னைத்தாங்கிச் செல்லுமாறு பணித்தான். அங்ஙனமே சேவகர் பலர் காவலனைச் சுமந்தெடுத்து அம்மலை முடியில் விளங்கிய பொற்கோயிலின் வாயிலில் வைத்தார்கள். அப்பொழுது சொன்னலங் கடந்த கித்தேரி ஒருமையுடன் இறைவனைத் தொழுது நின்றாள். நற்றவ மங்கை ஆண்டு நிற்றலைத் தன் சேவகர் வாய்மொழியால் அறிந்த வேந்தன் வாய்விட்டு அரற்றத் தொடங்கினன்.

"நான் பகைத்த நங்காய் நவின்ற உன்சோல் நீத்ததனுல்
வான் பகைத்த நீசனுந வாய்த்தபடி காண்களன்றே
உனைப் பகைத்தேன் என்றுபழி உள்ளுணர்ந்து நீயுமினி
எனைப் பகைப்பாய் என்றெனக்கோர் எள்ளளவும் அச்சமிலை

காணஒரு கண்ணுமிலேன் காலிறைந்சக் கையுமிலேன்
மாணஉருக் கோதைபனுய் வாய்த்தஉனை வாயுளன்நான்
உனைவாழ்த்த உன்னைவிட்ட ஒப்பிலவோர் மெய்க்கடவுள்
தனைவாழ்த்த வாயிருக்கச் சாந்துணையும் வாழ்த்துவனே"

என்று வாயார வழுத்தினுன். இவ்வாறு புரோசன் மனங்கனிந்து பேசிய வாசகம் மங்கையின் செவிகளில் தேனெனை இனித்தது. கல்மனத்தனுய வேந்தனைக் கருணையினுல் ஆண்டுகொண்ட கர்த்தரை நினைந்து மனம் நெகிழ்ந்தாள். நெஞ்சம் குழைந்தழுத மன்னனை நோக்கி "அரசே, வானிறையோன் அருளே உருவாய் அமைந்தவன்; சிறியோர் செய்யும் சிறுமையைத் தன் பெருமையாற் பொறுத்தருள வல்லவன்; அகங்குழைந்துருகும் அன்பரே அவனருளைப் பெறுவார்" என்று ஆர்வமொழி பகர்ந்து அவன் கண்களைத் தன் மலர்க் கரத்தால் தீண்டினுள். அந்நிலையில் செருக்கிழந்த மன்னன் பொருக்கெனக் கண்விழித்து நோக்கினுன்; முடங்கிய கால்களும் கைகளும் செம்மையுற்று உணர்ச்சி பெறக்கண்டான்; புத்துயிர் பெற்றவன் போல் பேரின்பமுற்றுன். வானிறையோன் கருணையை நங்கையின் கைவண்ணத்தாற் கண்டறிந்த காவலன் ஊனும் உயிரும் உருகிக் கண்ணீருகுத்தான். மெய்ப்பொருளைப் போற்றுது ஆற்றநாள் போக்கிய தன் அறியாமையை நினைந்து அரற்றினுன்.

"பொறுப்பானே நீதிபரன் பொங்குசினத் தென்றுமெனை
வெறுப்பானே நான்முடித்த வெவ்வினையே மட்டிலதால்
கண்டறிந்த மெய்ம்மறுத்தேன் கர்த்தரறிந் துட்பகைத்தேன்
பண்டறிந்த பேய்பணிந்தேன் பாவமறிந் தின்பமென்றேன்
பாவிகெட நான்நடந்தேன் பாவிகளாய் மற்றெவரும்
ஆவிகெடச் செய்தனன்நான் ஆ! ஆ! பொறுப்பானே
அளிப்பானே பாவியென ஆங்கெனக்குத் தன்மலர்த்தாள்
ஒளிப்பானே காட்சிநலாய் ஒன்றுரையாய் என்றழுதான்"

இங்ஙனம் பன்னுளியற்றிய பாவத்தைக் கண்ணீராற் கழுவிய மன்னன் பண்புகண்டு மங்கை மனமகிழ்ந்தாள். தவறுணர்ந்துருகும் அடியார்க்கு இறைவன் அருள் செய்தல் ஒருதலை என்று அவனுள்ளங் கொள்ள உணர்த்தினுள். அவ்வருள் பெறுதற்குரிய காலமும் அடுத்ததென்று அறிவித்தாள். அரசு வீற்றிருந்து ஈட்டிய அரும்பொருளை அற்றூர்க்கும் அலந்தார்க்கும் வழங்கி அறஞ்செயப் பணித்தாள். இவ்வாறு செம்மனத்தனுய மன்னன் செவிகளிற் சீரிய உண்மைகளை நங்கை அறிவுறுத்தியபொழுது அவள் திருமேனியினின்றும் இறையொளி எழுந்து படர்ந்தது. அவ்வொளியைக் கண்டோரனைவரும் பேரின்ப வாரியில் மூழ்கினர். "முகக் காந்தி கண்ணருந்த மூதுரைத் தேன் காதருந்தக்" களிப்புற்ற மன்னவன், மறைமொழி அருளிய மங்கையை விட்டுநீங்க மனமற்றவனுயினுன். மாசற்ற மன்னன் கருத்தறிந்த மங்கை, பொம்பேரு மலையிற் பெரும்பணி இயற்றுதற் பொருட்டு இறைவன் தன்னை அமர்த்திய குறிப்பினை அறிவித்து கோனேக்கி வாழும் குடிகளின்பொருட்டு நாட்டிற் போந்து ஆட்சி புரியுமாறு வேந்தற்கு விடைகொடுத்தனுப்பினுள். புனிதநங்கையின் வாய்மொழியை மறை மொழியாகக் கொண்ட மன்னவன் அவளடி பணிந்து புறப்பட்டான்.

பொம்பேரு மலையில் வாழ்ந்த மங்கையை அரிதிற் பிரிந்து தன் நாடடைந்த புரோசன் அம்மலையிற் பெற்ற அறவுரையின் வழிநின்று தானமும் தவமும் செய்யத் தொடங்கினுன்.

"அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலி னூங்கில்லை கேடு"

என்னும் பொருள்படக் கித்தேரி செவியறிவுறுத்திய வாய்மை அவன் சிந்தையைக் கவர்ந்து நின்றது. பன்னெடுங் காலமாக ஈட்டி வைத்திருந்த பெரும் பொருளை அற்றூர்க்கு வழங்கி அவர் அழிபசி தீர்த்தான். வானிறையோன் பெருமையை மன்னுயிர்கள் அறிந்து வணங்கி உய்வதற்குச் சாதனமாய திருக்கோயில் எடுத்தான். சிறப்பொடு பூசை வகுத்தான். இங்ஙனம் "வானகத்தோர் கண்டுவப்ப வையகத்தோர் கொண்டுவப்பக்" கடனறிந்தாற்றிய காவலன்பெருமை

நாடெங்கும் பரந்து நிறைந்தது. "புயலென வழங்கும் புரோசன்" என்று பூதலத்தோர் அவனைப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

இவ்வண்ணம் நாற்றிசையும் புகழ்மணக்க வீற்றிருந்த புரோசன் செய்கையை மன்னர் மன்னனுய காயன் கேள்வியுற்றுன். அழுக்காறும் வெகுளியும் அவனுள்ளங் கவர்ந்தெழுந்தோங்கின. தன்னடியில் தாழ்ந்து தலை வணங்கித் திறை செலுத்தும் குறுநில மன்னன் தன் ஆணையை மறுக்கத்துணிந்தனனே என்று அழன்று எழுந்தான்.

"எனக்கடங்தும் நாடன்அஞ்சா தென்தேவர் மீண்டொழித்துத்
தனக்கடங்தும் நாடுகெடத் தாசர்மறை சேர்ந்தனனே"

என்று வெகுண்டு வினவினன். அப்பொழுது மருங்கிருந்தான் ஒருவன் மன்னன் அடி வணங்கி "அரசே! உன் மகள் செய்த மாயையினுல் புரோசன் மனம் திரிந்தான்" என்று வினயமாய் உரை செய்தான். சிறையினின்று தப்பி ஓடிய தன் மகளைக் குறித்து நெடு நாளாக யாது மறியாதிருந்த அரசன் "என் மகள் எங்குள்ளாள்" என்று வினவினன்.

"உன்மகளே மன்னு உயர்ந்தபொம்பேர் உச்சியின்மேல்
முன்னரிங்கன் காணுமல் மொய்த்தகன்ற பேதையரைத்
தன்னிலங்கன் சேர்த்தித் தவமியற்றுந் தன்மையெனச்
சூழெவர்க்கும் தானுணர்ந்த சூழ்ச்சிமறை கூறினளால்
பாழெவர்க்கு மாகப் பலமாயை செய்துநிற்ப
ஆட்டினகன் கட்டுவித்தை அந்நாடன் அண்டையிற்போய்
காட்டினளாய் அன்னுன் கருத்தழிய உள்மருட்டி
இந்நாளில் வந்தமதத் தேய்த்தவனை உட்படுத்தாள்"

என்று அவன் மாற்றம் உரைத்தான். பொய்ம்மறை பயின்ற மாது சிறைச்சாலையினின்று மாயையால் வெளிப்பட்டு, பொம்பேரு மலையிற் போந்து, மதுகையற்ற மன்னரையும், மற்றோரையும் மருட்டி வருதலை அறிந்த காயன் சீற்றத்தாற் கண் சிவந்து வாய் துடித்தான். போந்தவிடமெங்கும் தொல்லோர் நெறியழித்த பொல்லாப் பேதையை இனி உயிர்வாழ விடுதல் ஒல்லாதெனத் துணிந்தான். முன்னமே அம்மங்கைக்கு மணமகனுகக் குறித்து வைத்திருந்த

வீரனை அழைத்தான். வந்து அடிபணிந்தெழுந்து நின்ற அவ்வீரனை நோக்கி,

"நீஅகவுற பொம்பேரு நேடிஅங்கண் என்மகளும்
போயகன்ற மங்கையரும் புல்லரேனக் கோய்தேறிந்து
தன்னலமுன் நீபருகத் தந்திலளாய் நின்றவள்தன்
இன்னுயிரை நீபருகி என்பழியும் உன்பழியும்
ஒன்றய் இனித்தீர்க்க ஒள்ளயிலோய்... ... ... ..."

எனப்பணித்தான். நெடுநாள் மானத்தால் மனம் புழுங்கி நின்ற மறப்போர்வீரன், மன்னன் ஆணைபெற்றபொழுது மட்டற்ற மகிழ்ச்சியுற்றான். வெம்படை வீரர் சிலரைத் துணைக்கொண்டு பொம்பேரு மலையின்மேற் சாடினன். இங்ஙனம் கித்தேரியின் உயிர்குடித்தற்குக் கூற்றுவன் ஒருவனை ஏவிய கொடுஞ்சினக்காயன் புது நெறி போற்றிய புரோசனையும் கொன்று வருமாறு சில வீரரைப் போக்கினான்.

பொம்பேரு மலையை நோக்கி வெஞ்சின வீரன் கடுகி வரும் பொழுது கித்தேரி அம்மலையின் உச்சியிலமர்ந்து அடுத்து வரும் பேரின்பப் பெருவாழ்வை நினைத்து அகமலர்ந்திருந்தாள். வெற்றுலகவாழ்வினை நீத்து வீட்டுலகடைதற்குரிய அற்றம் நோக்கி நின்றாள். மாநிலத்தில் மறப்பகையினும் அறப்படையே வலிதென்று கண்கூடாக்க் காட்ட விரும்பினாள். அவநெறியிற் செல்லாது தவ நெறியில் நிற்கும் அடியாரை மாறிலா இன்பத்தில் மகிழ்விக்கும் கர்த்தர் கருணையை நினைந்து களிப்புற்றாள்.

"சாலோக மாயடியேம் சாமீபம் சேர்ந்துவப்பப்
பூலோகம் நீத்தகலும் போதிதுவோ தப்பரனே
நீருபம் கொண்டிறந்த நின்தயையால் இன்றடியேம்
சாருபம் ஆவேமோ தாதாவே வேதாவே
என்மனமும் உன்மனமும் இல்லெனச்சா யுச்சியமாய்
புன்மனமும் பேருவரி போல்நிறைந்து வாழ்துமின்றே"

என்று ஆனந்தக் களிப்பாற் பாடினாள். இவ்வாறு கித்தேரி பத்து நாள் இடையறாது இன்ப வெள்ளத்தில் மூழ்கி இருந்தாள். பத்தாம் நாள் இரவில் வானவர்குழாம் அவளிருந்தசூழலை வந்தடைந்தது. விண்

ணவர் ஒளிகண்டு வியந்து நின்ற கித்தேரியை அன்னார் அக னமர்ந்து நோக்கி மறுநாள் நிகழநின்ற புதுமையை மகிழ்ந்துரைப்பா ராயினர். அவ்வுரையைச் செவியாற் பருகிய நங்கை கர்த்தரது வண்ணத் திருப்புகழைப் பண்ணொன்றப் பாடினள். வானவரும் கித்தேரியுடன் கலந்து தெய்வகீதம் பாடியபொழுது பொம்பேரு மாமலை பேரின்பவுலகத்தை நிகர்த்தது.

## அறப்படையும் மறப்படையும்

சென்ற காலத்தின் பழுதிலாத் திறனையும், எதிர்காலத்தின் சிறப்பையும், வானவர் கூறி மறைந்த பின்னர் பொழுது புலர்ந்தது. அந்நாள் மன்னுயிர்க்கோர் நன்னாளென்று கருதிய கித்தேரியும் தோழியரும், பொற்கோயிலின் முன்னின்று வணங்கி மயிலினம் போல் மலைமுடியினின்று இழிந்தனர். அப்பொழுது தினைப் புனங்களில் பறந்து வந்திறங்கிய சிறையாருமடக் கிளிகள் உண்ண வந்த கதிரை மறந்து கண்ணீர் வடித்தன. பூவார் சோலையிற் சுழன்ற வண்டுகள் மதுவினை மறந்து மறுக்கமுற்றன. மலைச்சாரலில் கறங்கி வழிந்திறங்கிய அருவிகள் கதறி அழுதன. இவ்வாறு பின் னிகழும் கொடுமையை முன்னறிந்த இயற்கையன்னை வாடித் தளர்ந்து நிற்க, மலையடி வாரத்தைச் சேர்ந்த மங்கையர், மறப்படை தாங்கிய சேனையொன்று தம் எதிரே வரக்கண்டார். அவ்வடிவாரமே இறைவன் குறித்த அமர்க்களம் என்றுணர்ந்த மங்கையர் கர்த்தரைக் கருத் தொன்றத் தொழுது மனங்கலங்காது நின்றார். மானினம் கண்ட வேடர் போல் மாதர் மேல் மண்டிய படைஞர் கித்தேரியைச் சூழ்ந்து நின்ற தோழியரை வாளால் எறிந்து வீழ்த்தினர். முகமலர்ந்து இன்னுயிர் வழங்கிய அம்மாதரின் நடுவே விளங்கிய கித்தேரியைக் கொல்லுமாறு அவள் கணவனாதற்கமைந்த வீரன் விரைந்து போந் தான். அன்னான் வன்மையைத் தன் மென்மையால் வெல்லக் கருதிய கித்தேரி புன்னகை பூத்த முகத்தினளாய்ச் செங்கரம் குவித் தாள். மறப்படை தாங்கி நின்றான் வெஞ்சின வீரன்; அறப் படை தாங்கி நின்றாள் அருந்தவ நங்கை. வீரன் கண்களிற் கன லெழுந்தது; மங்கையின் கண்களில் அருள் தவழ்ந்தது. வாளோச்

சினான் வீரன்; வணங்கி நின்றாள் மங்கை. நகை முகம் காட்டி நின்ற மங்கையை நோக்கி,

> "இன்னுயிர்க்குக் காதலனாய் என்னையன்று நீமறுத்தாய்
> உன்னுயிர்க்குக் காதகனாய் உற்றேன்நான்"

என்றுரைத்து, மண்ணதிர வான்நடுங்க அன்னாள் வணங்கிய பூஞ்சிரத்தை வாளாலறுத்து வீழ்த்தினான். தரையில் விழுந்த தலையினைக் கித்தேரி தன் மலர்க்கரத்தால் எடுத்து ஏந்தி நின்றாள். அக் காட்சியைக் கண்ட விண்ணவர் பூமழை சொரிந்தார்; மண்ணவர் கண்மழை பொழிந்தார்.

> "பூவினமே தேன்துளிப்பப் புள்ளினமே பாவொலிப்பக்
> காவினமே சூழ்துடிப்பக் கல்லினமே உள்ளுருக
> கண்டாருரைத் தாற்றார் காணார் அமைந்தாற்றார்
> அண்டா வளத்துலகம் அன்றோர் நவங்காண
> வாட்பலத்தால் வீழ்ந்தசிரம் வான்பலங்கோள் கித்தேரி
> தோட்பலத்தால் தானெடுத்துத் தூய்கரத்தில் ஏந்திநின்றாள்"

அன்னாள் கரத்திலமைந்த சிரத்தில் இலங்கிய கமலக்கண்கள் தறுகண் வீரனைக் கருணையுடன் நோக்கின.

> "அருளான் மலர்ந்தழகம் ஆர்ந்தஇன்பத் தேனொழுக
> மருளால் தனைத்துணித்தான் வன்முகத்தை நோக்கினளே"

தவப்பாவை நோக்கிய நோக்கு வீரன் மனத்தில் ஊடுருவித் தைத்தது. மருள் நிறைந்த அவன் மனத்தில் அருளொளி பாய்ந்தது. மறப்படையின் சிறுமையும், அறப்படையின் பெருமையும் மாசற விளங்கிற்று. வெறியுற்ற வேந்தன் சொற்கேட்டு அறிவறிந்த பாவையைக் கொன்ற கொடுமைதீர வீரன் அவள் மலரடியில் வீழ்ந்தான்; மெய்யரும்பி விதிர் விதிர்த்துக் கண்ணீர் சொரிந்தான். ஆண்டவனருளிய ஆரணமறிந்து அன்று முதல் பொய்மறுத்து மெய்புணர்ந்து வாழ்ந்து பொன்னுலகடைந்தான். இவ்வாறு மறப்படையாற்கொன்று மகிழ்ந்த வீரனை மனப்பண்பால் வென்று,

> "அறத்திற்கே அன்புசார்பேன்ப அறியார்
> மறத்திற்கு மஃதே துணை"

என்னும் மறைமொழியை விளக்கிய கித்தேரி தன் கரத்திலமைந்த சிரத்தொடு பொம்பேருமலையின் மீதேறினாள்.

"ஒளி ஏந்தும் பொற்றேர் உதயகிரி ஏறலெனக்
களி ஏந்தும் தன்மலைமேல் கைச்சிரத்தாள் மேனடந்தாள்
திங்களிரண் டோன்றியொரு செங்கதிரை ஏந்தலென
அங்கையிரண் டேந்துசிரம் ஆங்கோளிசெய் தேநடந்தாள்"

அம்மலையிற் படர்ந்த மென்கொடியே வெண்கொடியாகவும், குயி லினங்களின் குரலே பெரும் பறையாகவும், ஆடும் மயில்களே அரம்பையராகவும், மணங் கமழும் தென்றலே மணிப் பூங் கவரியாக வும், பூத்த நெடு மரங்களே பூங்குடையாகவும் கொண்டு விண்ணர சாளும் பேறு பெற்ற பெண்ணரசி, பொம்பேரு மலைப் பொற் கோயிலை நோக்கி நடந்த கோலம் கண்டோர் கண்ணையும் கருத்தை யும் கவர்வதாயிற்று.

"காமமற ஐம்பொறிகள் காத்தசயம் என்பர்சிலர்
நாமமற வாழ்வொழித்த ஞானசயம் என்பர்சிலர்
தாட்சிமிகப் பேயினங்கள் சாய்த்தசயம் என்பர்சிலர்
ஆட்சிமிக முப்பகைவென் றயசய மென்பர்சிலர்"

இவ்வாறு வியந்து பேசிய மாந்தரிடையே கருணை பொழியும் கண்க ளோடு கித்தேரி நடந்து சென்றாள். ஐந்து நாழிகை வழிநடந்து இறைவன் திருக்கோயிலை வந்தடைந்தாள். அக்கோயிலின் முன்பு செந்நீர் சொரிந்த தலையைக் கையுறையாக வைத்துக் கொய்த மலரொடு கொடி வீழ்ந்தாற்போன்று பூமியிற்படிந்து வணங்கினாள். அந்நிலை யில் நங்கையின் நல்லுயிர் உடலினின்றும் பிரிந்தது. கித்தேரி காட் டிய நெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்த புரோசனும், வெஞ்சினக் காய னது சேவகராற் கொலையுண்டு மண்ணுலகில் வழிகாட்டிய மங்கை யைப் பின்பற்றி விண்ணுலகம் போந்தான்.

மங்கையின் உடலினின்றும் உயிர்பிரிந்தபோது வானத்திற் கரு மேகம் திரண்டது. காரிருள் எங்கும் செறிந்தது. மின்னொளிவீசிக் கண்ணொளி பறித்தது. மலைகளும் மரங்களும் நடுங்க இடியேறு அதிர்ந்தது. கித்தேரியின் தோழியரைக் கொலை புரிந்த சேவகரும் புரோசனைக் கொன்ற படைஞரும் இடியோசை கேட்டு நடுங்கித்

துடித்தனர். நாற்றிசையும் சிதறியோடினர். அன்னார் சென்ற இடங்களிலும், நின்ற இடங்களிலும் இடையறாது இடிவிழுந்தது. இவ்வாறு தீயோரனைவரும் தீர்ந்து ஒழிந்த பின்னர் வானவன் ஏவலால் அவ்வழிப்போந்த மாதவனொருவன் அடிவாரத்திற் கிடந்த மாதர் நல்லுடல்களை எடுத்து உரிய முறையில் அடக்கம் செய்தான். அப்பால் பொம்பேரு மலையின் உச்சியில் கற்கோயில் வாயிலின்முன் அறுபட்ட மலரும் கொடியும்போல் சிரம் வேறு, உடல் வேறாய்க் கிடந்த கித்தேரியின் திருமேனியை அம்மாதவன் கண்டு அன்பினால் இன்புற வணங்கி தலைமிசைத் தாங்கிச்சென்று,

"ஆசைமிக அவ்விடத்தோர் ஆழ்ந்தகுழி செய்ததிலே
பூசைமிகக் கையெடுத்த பூவுடலை வைத்ததன்பின்
பல்வரமே கொண்டதெனப் பன்னிறப்பூ மேற்பரப்பி
நல்வரமே காய்க்களன நாட்புடைமன் மூடினனால்."

மண்ணுலகின் நல் அணியாய்த் திகழ்ந்த கித்தேரி விண்ணுலகின் நல் விருந்தாயினள் என்று ஆன்றோர் போற்றிப் புகழ்ந்தனர்.

## 8. எண்மர் பணியும் யேசுவின் அருளும்

மண்ணுலகை வாழ்வை நீத்த கித்தேரி விண்ணுலகம் கடந்து வீட்டுலகம் சேர்ந்தாள். அந்தமிலின்பத்து அழியாப் பதத்தில் வீற்றிருந்து, முத்தொழில் புரியும் அத்தனைக் கண்ணுற் பருகிக் களிப்புற்றாள். "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையேயாக" வானிறையோன் சேவடியை வணங்கினாள். கங்குகரை யற்ற பேரின்ப வாரியில் மூழ்கினாள்.

"கரைகாணு தங்கே களித்தனளாய் வாழ்த்திடவோர்
உரைகாணு இன்பநன்னீர் உண்டுண் டமிழ்ந்தினளே"

அடி பணிந்த திருமகளை இறைவன் ஆர்வமுற எடுத்தணைத்தான். மண்ணரசின் மணிமுடியை மறுத்துயர்ந்த மங்கையின் சென்னியில் விண்ணரசின் சின்னமாய மின்னார் முடிபுனைந்தான். மண்ணுலகில் தாயும் தந்தையும் கைவிட்ட தகைசான்ற நங்கைக்குத் தன்னையே இறைவன் தாயும் தந்தையுமாக நல்கினான். இங்ஙனம் இறைவன் இன்னருள் பெற்றுநின்ற கித்தேரி தான் பெற்ற இன்பம் தரணி

யெல்லாம் பெறவேண்டும் என்னும் ஆசையால் வானிறையோனை மனமார வாழ்த்தி

"பன்னுட் படர்ந்தஇருள் பட்டொழிய உன்தயையால்
என்னுடன் நாடாக என்றும்அருள் செய்யாயோ
ஈங்குவப்ப நானுமென்னை ஈன்றதந்தை தாய்நரகில்
ஆங்கேரிய என்றுமுன்னை ஆங்கிகழத் தாங்குவனே"

என்று மனமுருகி வேண்டி நின்றுள். கித்தேரியின் கருணை கண்டு வியப்புற்ற கர்த்தர் அவள் விரும்பியவாறே ஆகும் என அருள்புரிந்தார். மெய்யடியார் வேண்டும் வரத்தினை விரைந்து நல்கும் இறைவன் பெருமைகண்டு இன்புற்ற கித்தேரி தன் உடன்பிறந்தாரெண்மரும் தான் பெற்ற நிலையினைப் பெறும்வண்ணம் அருள்புரியவேண்டினுள். அவ்வரத்தினை நல்கிய இறைவன் அவ்வெண்மர் பணியின் திறத்தையும் கித்தேரியின் உள்ளங் கொள்ளக் குறித்தருளினுர்.

"வேரியபூஞ் சோலைநிழல் வேண்டியடை செல்வமிகும்
சீரியநன் னுட்டிடத்தே சென்றுள்பா சீலிஎன்பாள்"

அன்னுள் ஆசை மூன்றையும் அறவே அறுத்து, பகை மூன்றும் வென்று தாங்கரும் தவமேற்கொண்டு ஓங்கினுள். மெய்ந்நெறி உணராது, மனம் சென்ற நெறியே சென்றுழன்ற சீரிய நன்னுட்டு மாந்தரை மறை மொழியால் சீர்திருத்த முயன்றுள். கற்றேர் யாவரும் அறியா அறிவினளாய் விளங்கிய அந்நற்றவமங்கையை வாதில் வெல்ல இயலாத ஆடவர் வாளாலெறிந்து கொன்றுர்.

"கார்பூண்ட மாளிகைபூண் கார்த்தாது மாநகரில்
சீர்பூண்டு சென்றுள் செருமானி என்பவளே"

அம்மங்கை தவமுயன்று அரிதிற் பெற்ற உண்மையை அந்நாட்டார்க்குச் செவியறிவுறுத்தினுள். அவ்வுண்மையை உணர்ந்தார் பலர் புன்னெறியை நீத்து நன்னெறியைக் கடைப்பிடித்தார். அச்செயல்கண்டு ஆற்றுத கொடியோர் சிலர் விழுத்தவ மங்கையை வெட்டி வீழ்த்தினுர்.

இன்னும் "கனி சுமந்து தேன் பொழிந்த காலீச நாட்டில்" கடுந்தவம் புரிந்து மேம்பட்ட எப்பேமி என்பாள் அந்நாட்டிலமைந்த

மலையில் தன்னுயிரை நீத்தாள். "துன்னார் பகைக் கழியாத் தூவிநகர்" வந்தடைந்த சேனைவுரி என்னும் செம்மை சான்ற மங்கை பகை வேடர்க்கஞ்சிப் பாலைநிலம் சேர்ந்த அன்னம்போல் அந்நகரில் ஒன்னு ரிடை ஒதுங்கி வாழ்ந்து, பின்னர் அவர் வெம்மைக்கு இரையாயினள். 'கொடியாடு மணிமாடக் கோர்த்துவமாநகர்' புகுந்த விற்ரேரி என்பாள் கற்றவரும் அறிவரிய நற்றவம் செய்துயர்ந்தாள். அந்நகரில் அரசுபுரிந்த மன்னவன் அம்மங்கையைப் பலவாறு துன்புறுத்தினன். செந்தழல் வீசிய செங்கற் சுள்ளையில் அந்நங்கையை வீசி எறியப் பணித்தான். தீயையும் வெல்லும் திறம் வாய்ந்த விற்ரேரி செழுங் கமலத்தில் வீற்றிருக்கும் அன்னம் போல், செங்கனலின் நடுவே இலங்கினள். இங்ஙனம் வெங்கனலும் கொல்லாத விற் ரேரியின் மாயம் கண்டு மனங்கொதித்த மன்னவன் அம்மங்கை யைக் கல்லிற்கட்டிக் கயத்திலிடப் பணித்தான். ஆழ நெடுங்கயத்தில் காவலனிட்ட கருங்கல் நீரில் மிதந்து அலையிடைத் தவழ்ந்து விற் ரேரியைக் கரை ஏற்றியது. கடுங்கனலையும் நெடும்புனலையும் வென்று நின்ற மங்கையை வேந்தன் வாளால் எறிந்த பொழுது அப் பாவையின் திருமேனியினின்று பொங்கி வடிந்த பால் நாற்றிசையும் பரந்து பாய்ந்தது.

விழுப்பயன் கருதிய விபிராத்தை என்பாள் மந்தியும் அறியா மரங்கள் செறிந்த அடவியிற் புகுந்து கடுந்தவம் புரிந்தாள். எட் டாண்டு கழிந்த பின்னர் அக்கானகத்தைத் துருவிய காவலன் சேவகர் மங்கையைப் பிடித்துக் காயனிடம் அழைத்துச் சென்றார். புது நெறியை எட்டாண்டுகட்குப் பின்னரேனும் விட்டொழிப்பாள் என்று கருதி மன்னன் அவளைப் பலவாறு அச்சுறுத்தினன். இறை யளவும் அச்சமின்றித் தான் கற்ற வேதத்தைப் பற்றிநின்ற மங்கை யைத் திருத்தலரிதென்றுத் தெளிந்து தன் நாட்டை விட்டு ஓட்டி னன். காயன் நாடு கடந்த மங்கை காலிமாநகரிற் புகுந்து ஆண்டவர் அருளிய அருமறையின் பொருளை அறிவுறுத்தினள். அது கண்ட காலிநகர்க் காவலன் கனன்றெழுந்து அவள் சிரத்தினை அறுத் தெறிந்தான்.

"மண்ணுலகில் ஒப்பிறந்த மாரீனே என்பவள்" காலிசர் நாட்டில் கர்த்தர் பணியாற்றப் போந்தாள். அந்நாட்டு அரசன் அவள் தலையினைக் கொய்து தரையிடைத் தள்ளிய போது விழுந்த சிரம் எழுந்து மும்முறை மூவிடத்தில் துள்ளி விழுந்து மாய்ந்தது. மங்கையின் சிரம் வீழ்ந்த இடங்களில், கண்டோர் வியப்புற ஊற்றுக் கண் திறந்து நன்னீர் பெருக்கி நாட்டினை வளமுறச் செய்தது. தொன்னகராய தோலேது மாநகரில் களிமார்ச்சி என்னும் கன்னி பணியாற்றப் போந்தாள். பொய்த் தேவர் வழிபாட்டைப் போக்கி மெய்த் தேவன் பெருமையை அந்நகரில் நிலை நிறுத்த முயன்றாள். பன்னாளாகப் பணிபுரிந்தும், பொய்த்தேவர் வழிபாடு போகாதிருக்கக் கண்டு மனம் புழுங்கிய மங்கை அத்தேவர் உருவங்களைக் கையால் பறித்திழுத்து அழித்தாள். அச்செயல் கண்டு பொங்கி எழுந்த மாந்தர் அம்மங்கையை அடித்து மிதித்துத் தரையிடைத் தேய்த்துக் குற்றுயிராய்க் கிடந்த அவளுடலைக் கானகத்திலிழுத்துச் சென்று, கோளரிக்கு விருந்தாகக் கொடுத்தார்கள். இவ்வாறு பற்பல நாட்டில் பற்பல வகையாகப் பணி செய்த பாவையர் எண்மரும் வானிறையோன் கருணைக்குரியராயினர் எனக் கேட்ட கித்தேரி மனமுவந்து வாழ்த்தினாள்.

## கண்கண்ட புதுமை

கித்தேரியின் திருமேனி பொம்பேரு மலையிற் படிந்து ஆண்டு பல கழிந்தன. அன்னாள் தவமேனி தங்கிய சூழலில், கொடிகளும் செடிகளும் முளைத்து எழுந்து நறுமணம் கமழ்ந்தன. காலஞ் செல்லச் செல்ல கித்தேரி ஆற்றிய அற்புதச் செயல்களை மாந்தர் மறந்தொழிந்தார். இங்ஙனம் பல நூற்றாண்டுகள் கழிந்த பின்னர் பொம்பேரு மலையின் அண்மையில் அமைந்த பொங்கைநல்லூரில் வைகிய ஒரு மாது சிலந்தி நோயுற்றுச் சால வருந்தினள். மருத்துவர் அருத்திய மருந்தனைத்தும் சிறிதும் நலம் பயவாமையால், ஊணுறக்கமின்றி உலைந்து வாடிய அன்னாள், நோதலிற் சாதலே நன்றென்று கருதினாள். அந்நிலையில் அருள் வாய்ந்த ஆன்றோரொரு

வர் அம் மங்கையின் மனையகம் போந்து நோயின் தன்மையை நாடி அறிந்து,

"மண்ணிடத்தில் ஓர் மருந்தும் வாய்த்தபயன் இல்லதெனில்
விண்ணிடத்தில் வாழ்பவரை வேண்டிலருள்செய்வ ரென்றார்".

அவ்வுரை கேட்ட மாது அகங்குழைந்தழுது அவர் பணித்தவாறொழுக இசைந்தாள். அன்னாள் செம்மனங் கண்டு பரிவு கூர்ந்த சான்றோர், "பொம்பேரிடத்தாளைப் புகழ்மிகும் கித்தேரியை வேண்டினால் வெம்பேரிட ரொழியும்" எனக் கூறி மறைந்தார். அம் மொழிகளை மறைமொழியாகக் கொண்டு, பிணியுற்ற மங்கை அருளுருவாய கித்தேரியை அன்புகூர்ந்து வேண்டினாள். அன்றிரவு என்றுமில்லாததோர் அசதிகொண்டுறங்கினாள். மறுநாட் காலையில் துயிலொழிந்தெழுந்தபொழுது பன்னாள் பற்றிநின்ற வன்பிணியைக் காணாது வியப்புற்றாள். தான் கண்ட காட்சி கனவோ, நனவோ என்று ஐயுற்றாள். புண்ணிருந்த இடமும் தெரியாதவாறு நெடும் பிணியைத் தீர்த்தொழித்த புதுமையைக் கண்டார் அதிசயிக்கக் காட்டினாள்; கருணைசான்ற கித்தேரியைக் கைகூப்பி வாழ்த்தினாள். உடல் பொருள், ஆவி மூன்றையும் அன்றே அந் நங்கையிடம் ஒப்புவித்தாள். சிலந்தியை ஏவித் தன்னை வலிந்தாட்கொண்ட வானரசியைப் பொம்பேரு மலையிற் கண்டு அருள்பெற விரும்பினாள். அருளறம் பூண்ட கித்தேரியை மனக்கோயிலிலமைத்துப் பொம்பெரு மலையின் மீதேறினாள். புற்றும் மரமும் பொருந்திய மலையில் கித்தேரி இருந்து அருந்தவம் புரிந்த இடத்தினைக் காணாது அலக்கணுற்றாள். அம்மலையில் வாழ்ந்த் மாந்தரிடம் அவ்வம்மையைக் குறித்து வினவியபொழுது, அன்னார் ஒன்றுமறியாது திகைத்து நின்றார். அப்பொழுது வானவனே சான்றோனாய் வந்துரைத்த செய்தியையும், அன்னான் உரைவழியே கித்தேரியை நேர்ந்ததையும், அந்நிலையில் அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்ததையும், எழுந்தபொழுது கடும்பிணி தீர்ந்தொழிந்ததையும், அம்மாந்தரிடம் எடுத்துரைத்தாள். அன்று முதல் பிணியுற்றார் பலர் அம்மலையிற் போந்து கித்தேரியின் அருள் நினைந்து தொழுது அரும் பயன் கண்டார்.

பன்னுள் தலைநோயால் துயருழந்த ஒரு மாது பொம்பெருமலை யம்மையின் பெருமையைக் கேள்வியுற்று,

"தன் சிரத்தைத் தன்கரத்தால் தாங்கிநடந் தாளிரங்கி
என் சிரத்தின் நோயழிய இன்றுதயை செய்யாளோ"

என்று மனம் குழைந்து வேண்டினுள். அப்பொழுதே தலைநோய் தீர்ந்தொழியக் கண்ட அந் நல்லாள், தன்னனைய பிறரும் அன்னையின் அருள்பெற்று உய்தல் வேண்டுமெனக் கருதிப் பொன்னுல் கித்தேரியின் உருவம்செய்து பொம்பெரு மலையில் நிறுவினுள். நற்றவ மங்கையின் திருவுருவை அம்மலையில் நிறுவும்பொழுது வான் முகில் நன்னீர்த் துளி வழங்கி ஆர்க்தொலித்தது. புள்ளினங்கள் மகிழ்ந்து பண்ணுர்ந்த பாட்டிசைத்தன.

"வானுவப்பப் பார்மகிழ மன்னுயிர்கள் தீதொழிப்பத்
தானுவந்து மீண்டொருகால் தன்மலைவந் தாண்டிருக்க
கிரணு சலத்தெழுந்த கேழொளிவாய்ச் சூரியன்போல்
கருணு சலத்தெழுந்தாள் காசறுகித் தேரியன்றே"

இவ்வாறு, பொம்பெரு மலையில் அமைந்த கித்தேரியின் திருவடி தொழுது பிணி தீர்ந்தார் பல்லாயிரவர். விண்ணினின்று வீசிய மின்னெளியால் கண்ணெளி இழந்த ஒரு காரிகை மணி யிழந்த நல்லணிபோல் பொலிவழிந்து நின்றுள். எழுதிய பாவை போன்ற அவ்வழகியைப் பார்த்தோர் அனைவரும் பரிவுகூர்ந்தழுதார்; கரவாது தொழும் அடியார் குறைதீர்த்தருளும் கித்தேரியை வேண்டினுர். அப்பொழுது கண்டோர் வியப்புற மின்னுக்கொடி ஒன்று மேகத்தினிடையே தோன்றிற்று. அவ்வாெளியின் வண்மையால் கண்ணிழந்த நங்கை மீண்டும் கண்ணெளி பெற்றுள். பொம்பெரு மலையேறிக் கித்தேரி யம்மனைக் கண்ணுரக் கண்டு போற்றினுள்.

ஓர் ஊரில் வீதியிலே விளையாடிய ஒரு நங்கை அணிந்திருந்த நல்லணியினின்று கழன்ற மணியொன்று அவள் காதினுள்ளே புகுந்து செவியகத்தைச் சிக்கென அடைத்தது. பல்லாற்றுன் முயன்றும் அம்மணி வெளிப்படாமையால் பன்னீராண்டு மங்கை செவி நோயால் துன்புற்றுள். கித்தேரியின் கருணையைக் கேள்வி

யுற்ற அவள் பெற்றோர், அன்பு நிறைந்த மனத்தினராய் அவ்வம்மை யின் அருளை வேண்டினர். வேண்டியார்க்கு வேண்டிய எல்லாம் எய்துவிக்கும் கித்தேரியின் கருணையால் பல்லாண்டு செவியில் நிலைத்திருந்த மணி தானாகப் பெயர்ந்து விழுந்தது. ஆண்டு பலவாக அடைபட்டுத் தூர்ந்த வாயில் திறந்தபொழுது மங்கை எல்லையற்ற இன்பமுற்றாள். மற்றொரு மாது சூடர் நோயுற்று ஆற்றாது கொடுந்துயருற்றாள். பொல்லாத சூலை நோய் தீர்க்கும் வகையறியாது எல்லாரும் கைவிட்டார். அந்நிலையில் அருள் வாய்த்த ஒரு மடவாள் கித்தேரி அம்மையின் அடியின் மேலிட்ட மலரை எடுத்து வந்து உடல் பதைத்துக் கிடந்த மாதின் உந்தியின் மேல் வைத்தாள். அன்னையின் அடிதோய்ந்த மலர் அவள் மேனியிற் பட்டபோது கங்குற்பொழுதும் துயிலாத மாது நல்லுறக்கங் கொண்டாள். உறங்கி எழுந்தவுடன் சூடர்நோய் முற்றும் ஒழிந்து நலிந்த உடல் நலமுற்றிலங்கக்கண்டாள். நெடும் பிணியையும் நொடிப் பொழுதில் நீக்கவல்ல கித்தேரியின் அருள்நினைந்து உருகினாள்.

கித்தேரி கோயில்கொண்டருளிய பொம்பேரு மலையில் நோன் பிருந்து நோய் தீர்ந்தார் எண்ணிறந்தவராவர். அவ்வம்மன்மேல் ஓடிய நன்னீர் மாந்தர் உறுகுறை தீர்க்கும் அருமருந்தாய் அமைந் தது. அன்றியும், இறந்தவராக எண்ணப்பட்டோர் சிலர் கித்தேரி யின் அருளால் கல்லறையினின்றும் தப்பிப் பிழைத்தனர். ஒருநாள் நோய் முதிர்ந்த ஒருமாது மேனி வற்றி வாய் வறண்டு உடல் குளிர்ந் தாள். அக்குறிகளைக் கண்ட உற்றார் உறவினர் அவள் இறந்தா ளெனத் துணிந்து சாவுடையும் சாத்தொடையும் வருவித்தார். உயிர்ப்படங்கிக் கிடந்த மாது கித்தேரியை உள்ளத்தில் நினைந்து தொழுதமையால், உறங்கி எழுந்தவள்போல் புரண்டெழுந்தாள். தனக்கென உற்றார் வாங்கிவைத்த ஆடையையும் மாலையையும் பொம்பேரம்மனுக்குக் கையுறையாக அளித்துப் பூசனை புரிந்தாள்.

"சாந்துடனும் முன்னே தனக்கமைத்து வைத்திருந்த
பூந்தொடையும் பூந்துகிலும் பொம்பேரு நங்கையின்முன்
தானிடவந் திவ்வுயிரைத் தந்தனைநீ என்றிறைஞ்சி
கானிடவெம் பூம்புகையும் காட்டிஅடி வாழ்த்தினளால்."

ஒருநாள் ஆற்றங்கரையில் விளையாடப் போந்த ஐந்தாண்டுப் பாலனொருவனை ஓடும் புனல் இழுத்துச் சென்றது. புனல்வாய்ப் புகுந்த பாலனைக் கரையிலிருந்து கண்டானொருவன் விரைந்தோடிச் சென்று அவன் அன்னையிடம் அறிவித்தான். திக்கற்றவர்க்குத் தெய்வமே துணையென்று கருதிய நற்றாய் "தவறி விழுந்த மைந்தனைச் சித்தேரி காக்க" என்று தொழுது வேண்டி மைந்தனைத் தேடுதற்குச் சில மல்லரை அனுப்பினாள். அவர் கரை நெடுகச் சென்று ஆழ நெடும் புனலில் மிதந்து சென்ற மைந்தனுடலைக் கண்டெடுத்துத் தாயினிடம் கொண்டு சேர்த்தார். பிணம்போற் கிடந்த பிள்ளையைக் கண்டு பேதுற்ற நற்றாய் பொம்பேருமலை அம்மையை மீளவும் நினைந்தாள்.

"கேடறியா வல்லமைகோள் சித்தேரி உன்தமையயால்
நாடறிய இக்குழந்தை நல்களவக் கேன்றழுதாள்."

அந்நிலையில் தரையிற் கிடந்த பாலன் நகைமுகம் காட்டிக் கண் திறந்தான். தாயின் கண்ணீரைக் கண்டு தரியாது, தானும் கண்ணீர் சொரியத் தலைப்பட்டான். இறந்த மைந்தனை மீண்டும் பெற்றவள் போல் அன்னை கழிபேருவகை எய்தினாள். துன்பக் கண்ணீரை மாற்றி இன்பக் கண்ணீர் சொரிந்தாள். இப்புதுமையைக் கண்டவரும் கேட்டவரும் பொம்பேருமலையிருந்த திசை நோக்கி வணக்கம் போக்கினர். இன்னும் அன்பர் வேண்டுகோட்கிரங்கிச் சித்தேரி ஆற்றிய புதுமைகள் எண்ணிறந்தனவாம். இழந்த பொருள்களைச் சித்தேரி காட்டிக் கொடுத்தாள். நயந்த வரங்களை நல்கினாள். பசியும் பிணியும் நீக்கினாள். வசியும் வளனும் ஆக்கினாள். இவ்வாறு பொம்பேரின்மீதுகொண்ட பேரன்பினால் சித்தேரி சிறந்த நலம் புரிந்தாள்.

இத்தகைய நற்பெருஞ் செல்வி தமிழ்நாடு செய்ததவப் பயனாக, காவிரியின் வடகரையில் கோயில்கொள்ள இசைந்தாள். அடைக்கல மாதாவின் அருட்காவலில் அமைந்த திருக்காவலூர்க் கோயிலில், சித்தேரியின் அருள் இன்றும் விளங்குகின்றது.

"அருட்காவல் நீங்கா அடைக்கலத்தாய்க் கோயிலிடைத்
திருக்காவ லூர்வணங்கும் செல்வமிதும் சித்தேரி

ஆளுமிட மாகவிங்கண் அன்புமிக உள்ளிரங்கி
நாளும்நனி செய்புதுமை நாட்டிலறி யாருமுண்டோ''

என்று வீரமாமுனிவர் காவலூர்க் கோவிலில் நின்று காத்தருளும் கித்தேரியின் கருணையை வியந்து புகழ்ந்தார். மகப்பேறின்றி மனம் வருந்திய மாதர் கித்தேரியின் நற்றுள்தொழுது அறிவறிந்த மக்களைப் பெற்று வசை தீர்ந்து வழுத்தினர்.

"மன்னரசு செல்வமெலாம் வாரிநுரை ஒத்ததென
விண்ணரசு சென்றடைய விட்டனைத்தும் நீக்கினைநீ
இவ்வுலகின் வாழ்வனைத்தும் எண்ணுமல் நாம்அறஞ்சேர்
அவ்வுலகின் வாழ்வடைய ஆய்ந்தொழுகச் செய்வாயே''

"வான்விரும்பித் தாய்தாதை மற்றினமும் பாராமல்
கான் விரும்பி நற்றவத்தைக் காத்துமலை அண்டினைநீ
இனம் வேண்டி ஆண்டவரை ஈங்கிழவா தோர்நிலையாய்த்
தினம் வேண்டிக் கொண்டிருக்கத் திண்ணுறுதி தந்தருள்நீ''

என்று வீரமாமுனிவர், திருக்காவலூரில் கோயில் கொண்டருளிய கித்தேரியம்மையை வேண்டித் துதிக்கின்றார்.

---

முற்றிற்று

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| XV | 15 | அம்மொழிகளில் அவர் | அம்மொழி களில்பேசிய அவர் |
| 7 | 30 | பழிக்கும் | பழிக்குப் |
| 19 | 30 | பட்கடன் | பட்டகன் |
| 22 | 3 | பழிக்குத் | பழிக்கும் |
| 39 | 1 | செய | செய் |
| 44 | 3 | அகவுற | அகன்ற |
| 50 | 26 | தென்றுத் | தென்று |
| 51 | 22 | செயல்சளை | செயல்களை |
| 56 | 7 | வரரி | வாரி |

இவ்வாசிரியர் இயற்றிய

## வேறு நூல்கள்

1 வேலும் வில்லும் - -

2 ஆனந்தக் குமரன் - -

3 திருவள்ளுவர் நூல் நயம் - -

4 சிலப்பதிகார விளக்கம் - -

5 தமிழ்நாட்டு நவமணிகள் - -

6 வீரமா நகர் - -

7 பன்னிரு கட்டுரை - -